உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

திருமூல நாயனார் அருளிச் செய்த

திருமந்திரத்திலே உள்ள

# உபதேசம் என்னும் பகுதி மூலமும்,

அதற்கு ஒரு சிவயோகியார்

அருளிய விளக்கக் குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டு


கோயமுத்தூரையடுத்த

புதுமதுரை, ரிடையர்ட் டிப்டி - சூபரிண்டெண்டு,

## C. S. சுந்தர முதலியார்


எழுதிய

## உரையும்.

---


கோயமுத்தூர்:

எலெக்டிரிக் பிரிண்டிங் ஒர்க்ஸ், அச்சுயந்திர சாலையில்

பதிப்பிக்கப் பெற்றன.


 [1923.

## அபிப்பிராயங்கள்.

——:o:——

**Thiruvalar S. Anavaratavinayakam Pillay Avergal,** M. A., L. T., **Editor of the Tamil Lexican Madras.**

I am much obliged to you for the copy of your valuable commentary on an important portion of the mystic *Tirumantram* of Tirumula Nayanar. Considering that the work is a practical guide to the attainment of Divine wisdom, and that the portion you have selected forms the cream, as it were, of the whole work, one need not despair now that no good edition of the *Tirumantram* or its Commentary which, I am afraid, is yet to be written, is available. Your Commentary will be specially useful in a study of the *Tirumantram* as it, without confining itself to the portion selected, is often found to clear up difficulties in many other portions of the work. I shall be glad, however, if you can endeavour to bring out a correct text of this much appreciated Saiva Siddhanta treatise.

——:o:——

*Tiruvalar Manicka Naicker, Avergal, Superintending Engineer* :—

I thank you much for the copy of your Commentaries on the Upathesam Chapter of *Tirumantram.*

The whole of the valuable aphorisms of *Tirumantram*, needs commentaries of the sort you have produced to render them understandable by all Tamil Students and I wish you would write commentaries on the other Chapters as well, one after another.

* * * * *

The parallels you have quoted from the SIDDHANTA SASTRAS, "TEVARAM" and "TIRUVACHAKAM" are very valuable and show the great depth of your learning and the extent of your labours.

* * * * *

## திருவாளர், மு. வெங்கடசாமி நாடார் அவர்கள்,

Head Tamil Pandit,
S. P. G. College, Trichy.

சிவாநுபூதிப் பெருவாழ்வு தலைக்கொளும் சீரியராகிய ஐயா,

தாங்கள் அன்புடன் அளித்த மூன்று நூல்களும் ஒரு முறை படித்து மகிழ்ந்தேன். மற்றும் பன்முறை படித்தல் வேண்டும்.

இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றவர்களும் அறிதற்கரிய ஆகம நுண்பொருள் கூறும் திருமந்திரத்தின் உபதேசப் பகுதிக்குத் தாங்கள் வெளியிட்ட சீரிய உரை தமிழுலகிற்குப் பெரும்பயனளிக்கு மென்பது துணிபு. திருமந்திரத்தின் பல பொருள்களைச் சொற்றொடரும் தழுவிச் சிவஞானசித்தியார் முதலிய சித்தாந்த நூல்களின் ஆசிரியர்கள் மேற்கொண்டு அமைத்திருத்தலை யெடுத்து விளக்கியிருப்பது தங்கட்குச் சைவ சித்தாந்த நூல்கள் பலவற்றிலுமுள்ள ஆராய்ச்சியின் திறனையும் தெளிவையும் புலப்படுத்தி இன்பம் விளைக்கின்றது. இத்தகைய பேரறிவாளராய தாங்கள் திருமந்திர நூன்முழுதுக்கும் பாடம் செப்பஞ்செய்து ஓர் குறிப்புரையேனும் எழுதி வெளிப்படுத்தின் உலகிற்குப் பேருபகாரமாக விருக்கும். அவ்வணம் சிவபெருமான் திருவருள் பாலித்தல் வேண்டும்.

---

## திருவாளர், M. C. ஆனையப்பமுதலியார் அவர்கள்

Tamil Pandit,
High School, Namakal.

திருமூலர் திருமந்திர உபதேசவுரையைப் பார்வையிட்டேன்.

திருமூலர் சிற்சில இடங்களில் விஷயங்களைத் தொகுத்துக் கூறியும், பின் சில சில இடங்களில் அவற்றை வகைப்படுத்தியும், வேறு சில இடங்களில் தெளிவாய்ப் பொருள் விளங்கும்படி விளக்கியும் காட்டியுள்ளார் என்பதை இவ்வுரை எடுத்துக் காட்டியுள்ளது. சித்தாந்த சாஸ்திரப் பயிற்சியில்லாதாரும் சுலபமாய்த் தெரிந்துகொள்ளக்கூடிய எளிய நடையில் எழுதப்பட்டுள்ளது. மூலத்தைப்போலவே சுருங்கச்சொல்லி விளங்கவைக்குந் தன்மை இவ்வுரையின்கணுமுள்ளது. இலைமறை காய்போல் மறைந்துகிடக்கும் சித்தாந்தக் கருத்துக்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாய்ப் புலப்படுத்தக்கூடியது. இத்திருமந்திர மொன்றுமே மற்றச் சித்தாந்த சாஸ்திரங்கட்கு முதனூலாயிருக்கக்கூடுமென்பதையும் சிற்சில இடங்களில் குறிப்பாய் உணர்த்தக்கூடியது.

இவ்வுபதேச உரையொன்றுமே இந்நூல் முழுமையும் நன்கு பயிலமனவெழுச்சியை யுண்டுபண்ணக்கூடிய தென்பதிற் சிறிதுமையமில்லை.

*Tiruvalar*

**K. Subrahmaniam Pillay Avl** M. A., M. L.,

**Advocate and Tagore Professor of Law,**

**Madras.**

தாங்களனுப்பிய புத்தகங்கள் மூன்றும் பார்வையிட்டேன். 'அண்டபிண்டசமத்துவ' மென்பது, மிகவும் அருமையான நுண்பொருள்களையெடுத்து விளக்குவதோடு நம்மவர்களது திருவிழா முதலிய பல்வகைச் சமயச்சிறப்புக்களின் உட்பொருளைத் தத்துவக் கருத்துக்களின் வைத்து விளக்குகின்றது. ஜம்புத்தீவு முதலிய தீவுகளினிடத்தையும், பாற்கடன் முதலிய எழுகடனிலையையும் இனிதாக இந்நூல் இயம்புவதோடு, திருவைந்தெழுத்தின் நுட்பங்களுக்குக் கண்ணாடி போலிலகுகின்றது.

'திருமந்திர உபதேசப்' பகுதியுரை, ஸ்ரீமெய்கண்ட சித்தாந்த சாஸ்திரங்களுக்கும் திருமந்திரத்திற்குமுள்ள பொருளொற்றுமையை எடுத்துத் தெளிவு செய்வதில் இணையற்றதாகவுள்ளது.

'ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனார் மான்மியம்' அப்பெரியாரது வரலாறு முழுவதும், சித்தாந்த உண்மைக் கோவைப்படம் என்று விளக்குவதால், பாமரர் பண்டிதர் என்னும் இருதிறத்தாரும் வியக்கத்தக்க பெருநலன் உடையதாகக்காணப்படுகிறது.

---

*Tiruvalar*

**M. V. Minakshisundara Mudaliar Avl,** B. A.,

**1st Grade Pleader & Municipal Councillor.**

**Coimbatore.**

திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரத்திலே "உபதேசம்" என்னும் பகுதி மூலமும் அதற்கு ஒரு சிவயோகியார் அருளிய விளக்கக் குறிப்புகளை ஆதாரமாகக் கொண்டு மகா-௱-௱-ஸ்ரீ C. S. சுந்திரமுதலியார் அவர்கள் எழுதிய உரையும் பார்வையிட்டேன்.

அதன் நூன்முகத்திலே தமிழ் ஆரியம் என்ற இரு முதுமொழிகளும் தனித்தனி மொழிகள் என்பதும், சிருட்டியின் தொடக்கத்திற்றானே அவைகள் ஏககாலத்தில் இறைவனால் தோற்றுவிக்கப்பட்டன என்பதும், "தமிழிலுள்ள ஞானநூல்கள்யாவும் ஆரிய நூற்களின் மொழிபெயர்ப்பே" என்னும் கூற்று சரியானதன்றென்பதும், திருமூலர் திருமந்திரத்திலே நுதலிய பொருள் இன்னதென்பதும், அதனுள் ஒரு மந்திரமே உருமாறிப் பல இடங்களில் காணப்பெறுகின்றமையால் திருமந்திர ஒட்டுத்தொகை தவறாக அதிகம் காணப்பெறுகின்றதென்பதும், இத்திருமந்திரத்தையே பேராதரவாகக் கொண்டு பின் ஆசிரியர்கள் மேற்கொண்டு வழிமொழிந்துள்ளார்கள் என்பதும், அம்மூவாயிரம் மந்திரத்தினுள்ளும் சைவசித்தாந்த உண்மைகள் அனைத்தும் மற்றும் லௌகீக வைதிக தத்வ உண்மைகளும் காணக்கிடக்கின்றன என்பதும், அம்மூவாயிரமந்திரத்தின் சாரமாய் விளங்

குவது இவ்வுபதேசம் என்னும் பகுதி என்பதும் ஆதிய உண்மைகள் தாபிக்கப்பெற்றிருக்கின்றன.

மங்கல வாழ்த்தின் உரையிலே ஸ்ரீ விநாயகக்கடவுளின் சொருப தத்வார்த்தங்கள் குறிக்கப் பெற்றிருக்கின்றமை கவனிக்கற்பாலன.

உபதேசப்பகுதி உரையிலே அவ்வத்திருமந்திரக்கருத்துகளும் தத்வார்த்தங்களும் மிக விளச்கமாகவும் அருமையாகவும் விவரிக்கப்பெற்றிருக்கின்றன. ஒரு சிவ யோகியாராகிய பெரியார் பால் தாம் அறிந்து இன்புற்று அநுபவித்துவரும் உண்மை யநுபவங்களை உலகிற்குபகரித்த மகா-ா-ா-ஸ்ரீ முதலியார் அவர்களுக்குத்தமிழ் உலகமும் சைவ உலகமும் என்றும் கடைமைப்பட்டுள்ளன. "தாமின்புறுவதுலகின்புறக் கண்டு காமுறுவர் கற்றறிந்தார்" என்பது உண்மை வாக்கே.

இவ்வாசிரியர் இன்னும் திருமந்திரத்தின் மற்றப்பகுதிகளுக்குந் தாம் அருமையாய்த் தேடி வைத்திருக்கும் உரைக்குறிப்புகளை வெளிப்படுத்துவாராயின் லோகோபகாரமாகும்.

---

## திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் B. A. L. T.

Govt. Training School,
Srivilliputhur.

திருமூலர் திருமந்திரத்தின் ஒரு பகுதியாகிய "உபதேசத்" திற்குத் திருவாளர் கோ. சுந்தர முதலியாரவர்கள் இயற்றிய உரை முழுவதையும் வாசித்துப் பார்த்தேன். அது, சைவ சித்தாந்த நுண்பொருள்கள் பலவற்றைத் தெள்ளிதின் விளக்கி மிளிர்கின்றது. அதன் துணையில்லாவிடத்து, நூலாசிரியரது திருவுள்ளக் கருத்து இப்போது புலப்படுமெவ்வளவு நன்ருகப் புலப்படுதல் அரிதே. திருமந்திரத்திலும் ஏனைய சித்தாந்த நூல்களிலும் உரையாசிரியருக் கிருக்கும் ஆராய்ச்சியின் திட்பம், நூன் முகத்தாலும் விரிவுரையாலும் இனிது வெளியாகின்றது. சாத்திர ஆராய்ச்சியாளர்க்கு இது ஒரு நல் விருந்தாயிருக்கும். தமது குருவாகிய சிவயோகியாரிடம் தாம் கேட்டுத் தெளிந்த உண்மைகளைப் பிறர்க்கும் உதவவேண்டும் என்னும் உயரிய நோக்கத்தோடு, உணர்ந்தோதற் கரிய திருமந்திரத்தின் ஒரு செவ்விய பாகத்தை இவ்வாறு பலர் அறிந்துய்யுமாறு விளக்கி வெளியிட்ட சைவத் திருவாளராகிய முதலியாரவர்கட்கு உலகம் என்றும் நன்றிபாராட்டும். இவ்வுரையாசிரியர் நூலின் மற்றைய பகுதிகளையும் விரைவில் உரையோடு வெளியிடுவராயின் சைவத்திற்குப் பேருதவி செய்தவராவர். அவரது வயது முதிர்ச்சியைக் கருதும்போது, அச்சுப்பிழை திருத்தும் வேலையைத் தக்க பிறர் ஏற்றுக்கொள்ளல் முறை என்று தோன்றுகிறது. அவருக்கும் அச்சீரிய கருத்துள்ளது. அதை இனிது முற்றுவிக்கத் திருவருள் துணைசெய்வதாக.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமூலர் வரலாறு.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார் காவிரிசூழ்
சாத்தனூர் கருது மூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும் பசுக்களைக்கண்
டவனுடலிற் பாய்ந்து போத
வயலாகப் பண்ணையுட லருளான் மேவி யாவடுதண்
டுறையாண்டுக் கொருபா வாகக்
குயிலாரு மரசடியி லிருந்து கூறிக் கோதிலா வடகயிலை
குறுகி னாரே

திருத்தொண்டர் புராண சாரம்.

திருமூலநாயனார் திருக்கயிலாசத்திலே திருநந்தி தேவருடைய திருவருளைப்பெற்ற சிவசித்தர்களிலொருவர். இவர் பொதியமலையிற் சின்னாளுறையக் கருதிக் கயிலாயத்தை விடுத்து வழியிலுள்ள சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு தென்திசை குறித்துச்செல்லுங்காலை, காவிரியாற்றங்கரையிலுள்ள சாத்தனூர் சார்ந்தனர். அப்போழ்து அவ்வூரின் பசுக்கூட்டங்களை மேய்த்துக்கொண்டிருந்த சாத்தன் என்னும் ஓரிடையன் இறந்து கிடப்பதையும் அப்பசுக்கூட்டங்கள் அவன் உடலையடைந்து கதறிக்கொண்டிருப்பதையும் இச்சிவசித்தர் கண்ணுற்றார். உடனே அவர் அப்பசுக்கள் படுந்துயரத்தை நீக்கத் திருவுளங்கொண்டு தந்திருமேனிக்கு அரண்செய்து, தமது உயிரை இறந்துகிடந்த இடையன் உடலில் நுழைத்து எழுந்தனர். பசுக்களெல்லாம் மிகுந்த களிப்பெய்தி மீளப்போய் மேய்ந்து பொழுது சாய்ந்ததும் தாமே சாத்தனூருக்குத் திரும்பத் தலைப்பட்டன. இவரும் அவைகளுக்குப்பின் சென்று அவைகள் வீடுகள் தோறும் போனபின் வந்தவழியே திரும்பிச் சேமித்த தேகத்தைத் தேடினர். தேடிக்காணாது மெய்ப்பொருளைத் தமிழ் நாட்டினர்க்குத் தம் வாயிலாய் விளக்கியருளும் பொருட்டுச் சிவபெருமான் இச்சரீரத்தை மறைத்தருளினர் எனத் தெளிந்து திருவாவடுதுறையை அடைந்து, அங்குள்ள சிவாலயத்திற்கு மேற்குப் பக்கத்திலே அரசின் கீழ்ச் சிவயோகத்திலமர்ந்தனர். பின்னர் ஒவ்வொரு ஆண்டிற்கு ஒவ்வொரு திருப்பாட்டாக மூவாயிரம் திருப்பாட்டினால் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் விளக்கும் திருமந்திரமாகிய இவ் வரும்பெருந் தமிழ்நூலைப்பாடி யருளிப் பின் திருக்கயிலாயத்தை அடைந்தனர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# நூன் முகம்.

சிவபிரான் பெருங்கருணையாளனாதலால் ஆன்மாக்களுக்கு மல நீக்கமும் சிவத்துவ விளக்கமுஞ் சித்திக்கும்பொருட்டு அவைகளுக்கு மாயையின் கண்ணே தநு கரண புவன போகங்களை யளித்தருளுகின்றனர். இதுவே பஞ்ச கிருத்தியத்தில் சிருட்டியாம்.

இதனை :—

சத்தி சிவன் விளையாட்டா லுயிராக்கி
ஒத்த விருமாயாக் கூட்டத் திடையூட்டிச்
சுத்த மதாகத் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே

என்னும் மந்திரத்தாற் காண்க.

ஆன்மாக்களது கன்மத் தளவிலுண்டாகிய பக்குவ பேதத்தை யறிந்து, மல பரிபாகமில்லாத உலகர் உய்தற்பொருட்டுத் தமது ஐந்து திருமுகங்களில் சத்தியோசாத முதலிய நான்கு திருமுகங்களினின்று இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் மல பரிபாக மடைந்த சத்தி நிபாதர் உய்தற்பொருட்டு ஐந்தாவது முகத்தினின்று ஆகமங்களையும் இறைவன் தோற்றுவித்தனன். ஆகமங்கள் ஐந்தாவது திருமுகத்தினின்று தோற்றுவிக்கப்பட்டனவென்பதை யுணர்த்தவே எமது திருமூலநாயனார்

“ அஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே ”

யென வோதியருளினர் :—

இவ்வரும்பொருள் ஆரியம் தமிழ் என்னும் இரண்டு சீரிய மொழிகளினும் ஒரே காலத்துக் கூறப்பட்டுள்ளது. இவ்வுண்மையை அறியாதார் சிலரும் அறிந்தும் ஒத்துக்கொள்ள மனமில்லார் சிலரும் வீட்டுநெறி கூறும் நூல்கள் முதற்கண் ஆரியத்திற்றான் தோன்றின என்றும், தமிழிலுள்ள ஞான நூல்களியாவும் ஆரிய நூற்களின் மொழிபெயர்ப்பே என்றும் சொல்லுகின்றனர் இவரேயன்றி “ வீட்டு நெறி கூறாராயினர் தமிழராகலின் ” என்று எழுதிய ஓர் ஆசிரியருமுண்டு. ஆதலின் இக்கருத்துக்களின் நேர்மையை சிறிதாராய்தல் பயனுடைத்தாம்.

(1) மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளக்கின்ற காலத்து
ஆரிய முந்தமிழும் முடனே சொல்லிக்
காரிகை யார்க்குங் கருணை செய்தானே.

(2) அவிழ்க்கின்ற வாறு மதுகட்டு மாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந்
தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டு
முணர்த்து மவனை யுணரலு மாமே

இம்மந்திரங்களால் சிருட்டியின் றொடக்கத்திற்றானே இறைவன் ஆரியம் தமிழ் என்னும் இருமொழிகளையும் தோற்றுவித்தனன் என்பதும், அஞ்ஞான்றே அவ்விரண்டினும் முத்திநெறியை விளக்கி யருளினன் என்பதும் தெற்றெனப் புலப்படும். ஆதலால் ஞான நூல்கள் தமிழிலில்லாதிருந்து வட மொழியினின்று மொழிபெயர்க்கப்பட்டனவென்னுங் கூற்று சரியானதன்றென்பது நன்கு விளங்கும்.

ஆரியபாஷையில் வேதத்தை யொழுங்குபடுத்தற்கு வியாசர் அவதரித்தது போல் ஆகமங்களைத் தமிழில் ஒழுங்குபடுத்தற்குத் திருமூல நாயனர் அவதரித்தனர் என்னலாம்

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே."

என்னும் எமது திருமூல நாயனர் திருவாக்கே இதற்குப்போதிய சான்றாம்

"உள்ளுணர்வான ஞானமுதலிய வொருநான்குண்மை
தெள்ளு தீந்தமிழாற்கூறுந் திருமூலர் பெருமை"

என வெழுஞ்சேக்கிழார் நாயனர் செஞ்சொல்லும் இதனை வலியுறுத்துவதாம்.

இனி திருமந்திர ஆசிரியரது காலத்தைக் குறித்துச் சிறிது கூறுவாம்.—

சுந்தரமூர்த்தி நாயனர் அருளிச்செய்த திருத்தொண்டத் தொகையில் திருமூல நாயனர் பெயர் கூறப்பெற்றுள்ளது. சேக்கிழார் சுவாமிகள் :—

"முன்னிய வப்பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னிய மூவாயிரத்தாண் டிப்புவியின் மகிழ்ந்திருந்து"

எனக் கூறியிருக்கின்றனர்.

இவற்றை நோக்குங்கால் சுந்தரமூர்த்தி நாயனர் திருவவதாரஞ்செய்த காலத்திற்குக் குறைந்தது 3000 ஆண்டுகளுக்கு முன்னரே திருமூல நாயனர் தென்னாட்டிற்கு வந்தாரென்பது பெறப்படும்.

சுந்தரமூர்த்திநாயனார் காலம் கி. பி. 9-ம் நூற்றாண்டின் தொடக்கமாயின் திருமூல யோகிகள் திருமந்திரம் அருளத்தொடங்கிய காலம் இற்றைக்குச் சுமார் 4000 வருடங்களுக்கு முன் என்பதற்கையமில்லை.

மெய்கண்டார் சிவஞானபோதத்தை மொழிபெயர்த்தகாலம் இற்றைக்கு சுமார் 700 வருடங்கட்குமுன் என்று தெரியவருகிறது. அதற்கு 3000 வருடங்களுக்கு முன்னரே சிவஞான போதத்திற் காணப்படாத சித்தாந்தக் கருத்துக்கள் பலவடங்கிய திருமந்திர மிருந்ததென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

ஈண்டு மற்றொருண்மையும் உற்றுணரற்பாலது. திருமூல நாயனார் நந்தியெம்பெருமான் திருவருள் பெற்றவர். நந்திப்பெருமானுக்கு சிவாகமங்களுள் நவாகமங்கள் கிடைத்தனவென்பது :—

" சிவமாம்பரத்தி னிற்சத்தி சதாசிவம்
உவ மாமகேச ருருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றும் பெற்ற
நவ வாகம மெங்கணந்தி பெற்றானே "

" பெற்ற நல்லாகமங் காரணங் காமிகம்
உற்ற நல்வீரமுயர் சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்திரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே "

என்னும் மந்திரங்களால் விளங்கும் இவ்வொன்பதில் சிவஞான போதத்தைத் தன்பாலுடையதென்று சிறப்பிக்கப்படும் ரௌரவாகமம் சேர்க்கப்பட்டிலது.

சிலர் திருமூல நாயனார் 3000 வருடமிருந்திருக்கக் கூடுமோவென்று ஐயப்படுகின்றனர். விதிப்படி பஞ்சாக்கரத்தைக் கணித்தலாகிய யோகானுட்டிப்பிற் சித்தி பெற்றவர்கள் கூற்றை யுதைக்குஞ் சமர்த்துள்ளவர்கள் என்பது திருமூலர் தரும் விடை.

இதனை " காற்றைப் பிடிக்குங் கணக்கறிவா ளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே "

என்னும் மந்திரத்தானும்

" அஞ்சுக அஞ்செழுத்துண்மை யறிந்தபின்
நெஞ்சக த்துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சக மில்லை மனைக்குமழி வில்லை
தஞ்ச மிதுவென்று சாற்றுகின்றேனே "

என்னும் மந்திரத்தானுங்காண்க — " மனைக்குமழிவில்லை " யென்பது தேகம் நாசமாகாதென்பதாம்.—

இவ்வாறு காற்றைப் பிடிக்குங் கணக்கை யறிந்து பிறர்க்குமதன் பெற்றியைத் தம்மனுபவத்தாற்றோன்றும் அதிகாரத்தோடு போதிக்கவல்ல திருமூல மகாயோகிகள் பல்லாயிரம் வருடம் ஒருடலிலே யிருந்தனர் என்பது சித்தர் திறம் சிறிது கேள்வியுற்றோரும் ஒத்துக்கொள்ளக்கூடிய உண்மையே. விரிப்பிற பெருகும்.

சேக்கிழார் சுவாமிகள் "தமிழ் மூவாயிரஞ் சாத்தி" யென வோதியிருத்தலானும், இப்போது அச்சிட்டிருக்குந் திருமந்திரங்களில் மூவாயிரத்திற்கு மேல் சில மந்திரங்கள் காணப்படுதலானும் பிற்காலத்தவர் சிலர் பாயிரத்தினும் நூன்முடிவினும் தாம் கொண்ட கொள்கையை நாட்டவேண்டித் தாமே சில செய்யுள் செய்து இந்நூலுட் சேர்த்துவிட்டதாகச் சிலர் எண்ணுகின்றனர். இவர்கள் இவ்வாறு மிகுதியாய்க் காணப்படுவனவென்று கூறும் மந்திரங்கள் சீரிய சித்தாந்தக் கருத்தை விளக்குவன. ஆதலால் அவைகளைப் பாடினவர்கள் சித்தாந்த நூல்களை யோதியுணர்ந்த அறிஞர்களா யிருந்திருக்கவேண்டும் என்பது ஒருதலை அச்சபைய பெரியார்க்குத் திருமூலநாயனார் அருளினவை மூவாயிரம் மந்திரங்களே யென்பதும் இச்சிறந்தநூலில் தங்கள் செய்யுட்களைக் கோத்தல் முறையன்றென்பதுந் தெரியாதிருக்குமா ? இவ்வாறு ஆராயாது துணிந்து கூறுவது பெருங்குற்றமாம். திருமந்திரச் செய்யுட்களையெல்லாம் ஆராய்ந்து பார்க்கில் நாற்பது மந்திரங்களுக்குமேல் ஒவ்வொன்றும் இரண்டு மூன்று இடங்களில் உள்ளது காணப்படும். நூலை அச்சிட்டவர்கள் கவனித்திருந்தால் இவ்விதத் தப்பெண்ணத்திற்கு இடமிருந்திருக்காது.

சில உதாரணங்கள் கீழ்த் தரப்படுகின்றன —

"ஏனோர் பெருமையனுயினு மெம்மிறை"

யென்னும் மந்திரம் : –

(i) கெற்பக்கிரியை.
(ii) சீவன்.
(iii) தோத்திரம் என வரும்

அத்தியாயங்களினும்

"ஏறுடையா யிறைவா வெம்பிரா னென்று"

என்னும் மந்திரம் :—

(i) மகேசுர பூசை.
(ii) இதோபதேசம்.

என்னும் அத்தியாயங்களிலும்.

" காயக் குழப்பனைக் காய நன்னாடனை "

என வரும் மந்திரம்.—

(i) சுத்தா சுத்தம்.

(ii) கூடா வொழுக்கம் — இவைகளினும்,

" சிவன் முதல் மூவரோ டைவர் "

என வரும் மந்திரம் :—

(i) திருமூர்த்திகளின் சேட்டகனிட்ட முறைமை

(ii) திருவம்பலச்சக்கிரம் — இவைகளிலும்.

காணப்படும்.—

இனி, திருமந்திரமே சித்தாந்த நூல்களுக்கெல்லாம் முதல் நூலென்பதைச் சில எடுத்துக்காட்டுக்களாற் சிறிது விளக்குவாம் :—

(1) " அருளல்ல தில்லை யரனவனன்றி
அருளில்லை யாதலி னாலோருயிர்க்கு "

என வரும் திரு மந்திரம் — இதைத் தழுவியே சிவஞானபோதம்.—

" அருளு ண்டாமீசற் கதுசத்தி யன்றே
அருளு மவனன்றியில்லை யருளின்ற வனன்றேயில்லை !

என்றெழும் இச்செய்யுட்களின் கருத்து வடமொழிச் சிவஞான போதத்திலில்லை.

" கண்ணொன்றுதான் பலகாணுந்தனைக்காணா "

என்னும் திருமந்திரம் :—

(2) " காட்டிய கண்ணே தமைக்காணா "

* *

என வரும் சிவஞான போதம் —

(3) " ஆணவ மாயையுங்கன் மமுமாமலங்
காணு முளைக்குத் தவுடுமி யான்மாவும் "

* *

என்று திருமந்திரம் கூற,—

" நெல்லிற் குமியுநிகழ் செம்பினிற் களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே "

* *

எனச் சிவஞானபோதம் செப்பிற்று — சிவஞான போதத்தில் ஆசிரியர் உமியை மாயை மல கன்மங்களுக்கு உவமை கூறினர். திருமந்திரத்தில் நாயனர் ஆணவம்—மாயை—கன்மம் இவைகளுக்கு முறையே முளை தவிடு உமிகளை உவமை கூறியிருக்கிறர். இதை யொட்டியே சித்தியாரில் :—

" நெல்லினுக்கு முளையோடு தவிடுமிப்போல் "

என அருணந்திசிவம் அருளிச் செய்தது பாராட்டத்தக்கது :—

(4) " சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான வைம்முக வீச னரனும்
பவமுறுமாலும் பது மத்தோ னீரும்
நவமவை யாகி நடிப்பவன் ருனே "

" தலை யான நான்குந் தனதருவாகு
மலையா வருவுரு வாகுஞ் சதாசிவ
நிலை யான கீழ்நான்கு நீடுருவாகுந்
துலையா விவைமுற்று மாயல்ல தொன்றே "

என்பன திருமந்திரச்செய்யுள்கள். —இவற்றின் கருத்து சிவஞான சித்தியாரில்

" சிவன் சத்தி நாதம் விந்து சதாசிவன் றிகழு மீசன்
னுவந்தரு ளுருத்தி ரன்ருன் மாலய னொன்றி னொன்றுய்ப்
பவந்தரு மருவ நாலிங் குருவநா லுபய மொன்று
நவந்தரு பேத மேக நாதனே நடிப்ப னென்பர். "

என வெளியாகின்றது.—மூன்றிடத்தில் எதுகைகளிலும் ஒற்றுமையிருத்தல் காண்க.

(5) " வேதமொ டாகமம் மெய்யா மிறைவனூல்
ஓதும் பொதுவும் சிறப்பு மென்றுள்ளன "

என்னுந் திருமந்திரம்.—

" வேதநூல் சைவநூலென் றிரண்டே நூல்கள்
* *
ஆரண நூல் பொதுச்சைவம் அருஞ்சிறப்பு நூலாம் "

என்னுஞ் சிவஞான சித்தியார் —

(6) " சூரிய காந்த முஞ்சூழ் பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ்சூழ் பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதியிற் சுடுமாறுபோல்
ஆரியன் தோற்றமு னற்ற மலங்களே. "

என்னுந் திருமந்திரம்.—

" சூரியகாந் தக்கல்லி னிடத்தே செய்ய
சுடர்தோன்றி யிடச்சோதி தோன்று மாபோல்
ஆரியனு மாசான்வந் தருளாற் றேன்ற
அடிஞான மான்வாவிற் றேன்றுந் தோன்ற "

எனவருஞ் சிவஞான சித்தியார்.—

(7) (i) அறிவிலன மூர்த்தனராகாதி சேரான்
குறியொன்றிலா னித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றிண்கர்த்தா வல்லோன்
கிறியன் மலவிய பி சேவலத் தோனே—

(ii) உருவுற்றுப் போகமே போக்கியத் துற்று
மருவுற்றுப் பூதமனாதியான் மன்னி
வருமச்செயல் பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற்றிடுஞ் சீவன் காணுஞ் சகலத்தே—

(iii) இருவினை யொத்திட வின்னருட் சத்தி
மருவிட ஞானத்தா லாதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே—

என்பன திருமந்திரச் செய்யுள்கள்.— இவற்றின் கருத்து சிவஞான சித்தியாரில் :—

(i) அறிவிலன மூர்த்தனித்த னராகாதி குணங்களோடுஞ்
செறிவிலன் கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான்
குறியிலன் கர்த்தாவல்லன் போகத்திற் கொள்கையில்லான்
பிறிவிலன் மலத்திேனாடும் வியாபிகே வலத்திலான்மா.

(ii) உருவினைக் கொண்டுபோக போக்கியத்துன்னல் செப்பல்
வருசெயன் மருவிச்சத்த மாதியாம் விடயந்தன்னிற்
புரிவதுஞ் செய்தங்கெல்லா யோனியும் புக்குழன்று
திரிதருஞ் சகலமானவ வத்தியிற் சீவன் சென்றே.

(iii) இருவினைச் செயல்களொப்பி லீசன்தன் சத்திதோய்ந்து
குருவருள் பெற்றுஞான யோகத்தைக் குறுகிமுன்னைத்
திரிமல மறுத்துப் பண்டைச் சிற்றறிவொழிந்த ஞானம்
பெருகி நாயகன் றன்பாதம் பெறுவது சுத்தமாமே.

என வெளியாகிறது.—இவற்றில் பொருளொற்றுமையோடு சொல்லொற்றுமையுப் நிரம்பியிருத்தல் பெரிதும் கவனிக்கத்தக்கது.—

(8) (i) திருந்து நற்சீயென் றுதறியகையும்
அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்
பொருந்தி லிமைப்பிலிய வ்வென்ற பொற்கையும்
திருநத்தீயாம் திருநிலே மவ்வே ”

(ii) அரன்றுடி தோற்ற மமைத்தல் திதியாம்
அரனங்கி தன்னி லரையிற் சங்காரம்
அரனுற் றணையி லமருந் திரோதாயி
அரனடி யென்று மனுக்கிரக மென்னே "

என்னுந் திருமந்திரம்.—

(i) " சேர்க்குந் துடிசிகரம் சிக்கெனவா வீசுகர
மார்க்கும் யகர மபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்."

(ii) " தோற்றந் துடியதனிற் றேயுந் திதியமைப்பிற்
சாற்றியிடு மங்கியிலே சங்கார—மூற்றமா
யூன்று மலர்ப்பதத்தே யுற்ற திரோதமுத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு."

என்னும் உண்மை விளக்கம்.

(9) " நம்முத லோரைந்தி னுடுங் கருமங்கள்
அம்முத லைந்தி லடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முதலாகுஞ் சதாசிவன் றானே,"—

என்னும் திருமந்திரம்.—

" நம்முதலா யோதிலரு ணடாது நாடுமருள்
சிம்முதலா யோதுநீ சென்று "

என்னும் உண்மை விளக்கம்.—

(10) " வெளியின் வெளிபோய் விரவிய வாறும்
அளியி னளிபோ யடங்கிய வாறும்
ஒளியி னொளிபோ யொடுங்கிய வாறும்
தெளியு மவரே சிவசித்தர் தாமே. "

என்னுந் திருமந்திரம்.—

நெறிகொள்

" வெளியில் வெளியில் வெளியன் வெளியி
லொளியி லொளியி லொளியன்—ஒளியில் "

" அளியி லளியி லளிய னளியி
லளவில் அளவி லளவன் "

என்னும் நெஞ்சுவிடு தூது.—

2

(11) " மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா வொருவனை "

எனவரும் திருமந்திரம்.—

" மெய்யர்க்கு மெய்யன் வினைக்கு வினையினன்
பொய்யர்க்குப் பொய்யாய்ப்பொய் யாயினன் "

எனவோதும் நெஞ்சுவிடு தூது.—

(12) " ஏனோர் பெருமைய னாகிலு மெம்மிறை
ஊனே சிறுமையு ளுள்கலந் தங்குளன்
வானோ ரறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தி னளவே.—"

என்னுந் திருமந்திரம் —

" பெருமைக்கும் நுண்மைக்கும் பேரருட்கும் பேற்றி
னருமைக்கு மொப்பின்மை யான் "

* *

" ஆனு வறிவா யகலா னடியவர்க்கு
வானுடர் காணாத மன்—"

என்னுந் திருவருட்பயன்.—

(13) " ஒருமையு ளாமைபோ லுள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை யற்றே "

திருமந்திரம்.—

" புலனடக்கித் தம்முதற்கட் புக்குறுவார் போதார்
தலநடக்கு மாமை தக—"

திருவருட்பயன்.—

(14) " நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம் "

என்பர் திருமூலர்.—

" உற்றுற்றுப் பார்க்க வொளிதரு மானந்தமதை
நெற்றிக்கு நேர்கண்டு நிலைப்பதினி யெக்காலம் "

என்பர் பத்திரகிரியார்.—

இவைபோல்வன இன்னும் பலவுள :—

இத்துணைச் சிறப்புவாய்ந்த திருமந்திரம் ஒன்பது தந்திரங்களாகப் பிரிக்கப்பெற்றுள்ளது. ஒவ்வொரு தந்திரமும் விஷயப் பாகுபாடு நோக்கிச் சிறு

பகுதிகளாக வகுக்கப்பட்டிருக்கிறது. 'உபதேசம்' என்னும் பகுதி முதல் தந்திரத்தில் ஓர் உட்பிரிவு. இது 30 மந்திரங்கொண்டது. 3000 மந்திரங்களின் சித்தாந்தக் கருத்தெல்லாம் இம்முப்பது மந்திரங்களில் அடங்கியுள்ளது.

" மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூல னுரைசெய்த முந்நூறு மந்திரம்
மூல னுரைசெய்த முப்ப துபதேசம்
மூல னுரைசெய்த மூன்று மொன்றுமே.—"

என்னும் ஆசிரியர் திருவாக்கானே இனிது இவ்வுண்மை பெறப்படும்.—

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளை அடிமை யாக்கிக்கொள்ள விரும்பிச் சிவபிரான் ஆசாரிய மூர்த்தங்கொண்டு கைலைமலையி னின்றிறங்கிப் போந்து, விளக்குத் தன்முன் கிடந்த இருளைக் கெடுப்பது போல் தம்முடைய அருட்பார்வையால் மாணிக்கவாசக சுவாமிகளுக்குப் பிறவித் துன்பத்தை யொழித்து அவர் சிரசில் தம்மிரண்டு திருவடிகளையுஞ் சூட்டி முத்திநெறிகளை உபதேசித்தருளிய செய்தியைத் திருவாதவூரார் புராணம் திருப்பெருந்துறைச் சருக்கம் விளங்க உரைக்கும் இம்முறையானே பக்குவான்மாக்களுக்கு உபதேசமருளும் பொருட்டுச் சிவபிரான் குருவடிவங்கொண்டு பரமாகாயத்தினின்று இழிந்து வந்து அருள் புரிவதாக " விண்ணின்றிழிந்து " என வரூஉம் மந்திரங்களால் எமது நாயனார் கூறுகின்றார் இம்மட்டன்றி வாதவூரடிகட்கு இறைவன் உபதேசித்தருளிய முறையைத் திருவாதவூரார் புராணம் விளக்கிச் சொல்லும் நெறியையும் திருமந்திர உபதேசப் பகுதியையும் ஒப்புநோக்குவோர்க்குப் பற்பல ஒற்றுமை நயங்கள் தெரியவரும்.

ஈண்டு தாயுமான சுவாமிகளுக்கு உபதேச மருளிய மௌன குருவம்.

" மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌன குருவே."

என்ற சுவாமிகள் திருவாக்காற் போதருகின்றபடி திருமூலர் திருமரபில் வந்தவரென்பது கருதத்தக்கது. அன்றியும் தாயுமானார் தம்பாடல்களிற் பல திருமந்திரக் கருத்துகளையும் சொற்களையும் சொற்றொடர்களையும் தழுவிச்செல்வதும் ஆய்வார்க்கு இனிது புலனும். இங்ஙனமே திருவாசகத் திருச்செய்யுட்கள் பலவற்றினும் இவ்வொற்றுமை நயம் காணக்கிடக்கின்றது. இந்நூலுரைக்கண் சில உதாரணங்கள் வந்துழிக்காணலாம் —

இதுகாறும் கூறியவாற்றால் இந்நூல் ஒரு பெரிய சிவ சித்த சிகாமணியின் அனுபவத் திருவாக்கென்பதும் மிகப் பழயதென்பதும் சித்தாந்த சாத்திரங்கட்கும் மற்றும் பல நூல்கட்கும் மூலமென்பதும் விளங்கும். இத்தகைய

அரும்பெருஞ் சிறப்பு வாய்ந்த திருமந்திரத்தைப் "பொருளுணர்ந்து சொல்லுவார்" பெறும் பேற்றை அளவிட்டுரைத்தலரிது. அதனைத் திருமூல யோகிகள் —

" மூல னுரை செய்த மூவாயிரந் தமிழ்
ஞால மறியவே நந்தி யருளது
காலை யெழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே "

என்னுந் திருமந்திரத்தாற் கூறியுள்ளார்.

மேற்காட்டியபடி திரு மந்திரம் மூவாயிரத்தின் கருத்தும் "உபதேசம்" என்னும் இப்பகுதியில் அடங்கியிருத்தலால் இப்பகுதியைக் கருத்தறிந்தோதுவார்க்கு ஒப்புயர்வற்ற திருவருட்பேறு சித்தியாம் என்பது வெளிப்படை.

இந்நூலைத் தமியேன் வெளியிட நேர்ந்த அவசரத்தையும் இங்குச் சிறிது கூறல் முறையாம் என்றெண்ணுகின்றேன்.

சுமார் 30 வருடங்களுக்கு முன் உத்தர தேச வாசியாகிய ஒரு சிறந்த யோகீசுவரர் தமியேற்கு நேர்பட்டார். அவருடன் சில காலம் சஞ்சரித்ததில் அவர் கிருபை கூர்ந்து அண்டபிண்ட சமத்துவத்தைக்காட்டும் ஒரு படத்தை யெழுதி ஈந்து அதிலடங்கிய விஷயங்களை விளக்குதற்குத் திருமூல நாயனார் திருமந்திரத்தையும் அவர் குரு பரம்பரையினறிந்த உண்மைகளையும் ஆதாரமாய்க்கொண்டு இதுவரை சித்தாந்த சாத்திரங்களில் விரித்தோதப்பெறாத சில வியாக்கியானங்களையும் வெளியிட்டருளினார். இவைகளைக் குறித்துவைத்திருந்து சில வருடங்களுக்கு முன் **அண்ட பிண்ட சமத்துவ விளக்கம், சுந்தரமூர்த்தி நாயனார் மான்மியம்** என்னும் நூல்களை யெழுதி வித்துவசிரோமணி ஸ்ரீமான் நல்லதம்பிப் பிள்ளையவர்களிடம் காட்ட அவர்கள் அவைகளை யொழுங்காக்கி அச்சிடுமாறு தூண்டினார். அவ்வாறே அவைகள் பிரசுரிக்கப்பட்டன. அதன் மேல் மேற்கூறியபடி 3000 மந்திரங்களினுட்பொருளைச் சுருங்கக்கூறி விளங்க வைக்கும் திறனுடைய திருமந்திர உபதேசத்தை உரையோடு வெளியிடின் பலருக்கும் பயன்படுமென்னுமோர் எண்ணந் தோன்றியது. ஆனால் திருமந்திரத்திற்குப் பொருள் எழுதுதலின் அருமை மிகவும் அச்சந் தந்தது. ஆயினும் சொற்பொருளிலக்கணம் முற்றத் தெரியாதேன் இப்போது இவ்வுரையை வெளியிடத் துணிந்ததற்கு ஒரே காரணமுண்டு. முன்னோர் அரும் பெரு நூல்களை முறைப்படி கற்போர் இக்காலத்து மிக அருகி வருகின்றனர். இச்சமயத்து உண்மைப் பெரியார் ஒருவர் மாபெருஞ் சிறப்புடைய இந்நூலுக்கு சுருக்கிச்செய்த உரையை என்னோடு

மறைந்துபோகவிடாது பிறர்க்கும் பயன்படுத்துதல் சடமையாகத்தோன்றியது. "நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்னும் திருவாக்கை எற்ற பெற்றி கடைப்பிடித்தொழுகவேண்டு மென்னும் கொள்கையே அடியேனை இம்முயற்சியிற் செலுத்தியது. ஆதலின் இவ்வத்தியாயத்தில் அடங்கிய 30 மந்திரங்களும் மேற்சொன்ன யோகீசுவரர் காட்டியருளிய விளக்கத்தைத் துணைக்கொண்டு ஒருவாறாக உரை எழுதி முடித்தேன்.

பின்னர் அதை வித்துவ சிரோமணிகளாகிய :—

1. ஸ்ரீமான் S. சச்சிதானந்தம்பிள்ளை அவர்கள் B. A., L. T.
2. ,, C K சுப்பிரமணியமுதலியார் அவர்கள் B. A.

இவர்களிடம் காட்ட அவர்கள் அதைத்திருத்தி ஒழுங்காக்கி விரைவாய் அச்சிடும்படி வற்புறுத்திக்கூறவே அச்சிடத்துணிந்தேன்.

மேற்குறித்த வித்துவசிரோமணிகளுக்கு எக்காலமும் நன்றியறிதலுள்ளவனாக இருக்கக்கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

அடியார்க்கடியன்.

**கோ. சுந்தரம்.**



உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# மங்கல வாழ்த்து.

இந்நூலாசிரியர் தமக்குச் சிவபிரான் மானுடச்சட்டை கொடுத்ததின் கருத்தைத் திருவருளா லறிந்திருந்தார் என்பது :—

" என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
றன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே."

என்னும் மந்திரத்தானும்,

" மாலாங்க னேயிங்கி யான்வந்த காரண
நீலாங்க மேனி நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்ப வந்தேனே "

என்னும் மந்திரத்தானும் விளங்கும். இவ்வாறு தாம் வந்த காரணத்தை உணர்ந்த ஆசிரியர் அதன்படியே தமிழ் செய்யத் தொடங்கினார். தொடக்கத்திலே மங்கலவாழ்த்துக் கூறுகின்றார். என்னை? ஆன்மாக்கள் முதல்வனுக்கு எத்திறத்தானும் அடிமையேயாம் என்பதன் உண்மையையும் விநாயகக் கடவுள் உற்பவித்த காலத்தில்

" என்னரே யாயினும் யாவதொன் றெண்ணுதன்
முன்னரே யுனதுதாண் முடியுறப் பணிவரே
லன்னர்தஞ் சிந்தைபோ லாக்குதி யலதுனை
யுன்னலார் செய்கையை யூறுசெய் திடுதிநீ "

என இறைவன் கட்டளை யிட்டிருப்பதின் உண்மையையும் மாணக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டு முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவது இன்றியமையா தாதலின். -- இவ்வாழ்த்தானது வணக்கத்தைக் குறிப்பதனோடு நூனுதலும் பொருளியல்பையும் ஓராற்றாற் குறிக்கும்—

## * திருமந்திர நூலின் விநாயகர் காப்பு.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
யிந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்று கின்றேனே.

* இது திருமந்திரத்தின் முதலிலுள்ள காப்புச்செய்யுள். உபதேசம் என்னும் பகுதியைச் சேர்ந்த தன்று.

[பதவுரை] — ஐந்து கரத்தனை — ஐந்து திருக்கரங்களையுடையவனை; யானை முகத்தனை — பிரணவ சொரூபமாகிய யானை முகத்தையுடையவனை; இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை — மதியின் இளம்பிறை போன்ற கொம்பினையுடையவனை; நந்தி மகன்தனை — சிவபெருமானது மூத்த குமாரனை; ஞானக் கொழுந்தினை — ஞானமுடிவு அல்லது சித்தாந்தச் செல்வமாகிய விநாயகக்கடவுளை; புந்தியில் வைத்து — சிந்தித்து; அடிபோற்றுகின்றேன் — அவன் திருவடிகளைத் தோத்திரம் செய்கின்றேன்.

[விசேடவுரை] — விநாயகக்கடவுளின் ஐந்து திருக்கரங்களும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளலென்னும் பஞ்ச கிருத்தியத்தைக் குறிப்பனவாம் — இவ்வைந்து திருக்கரங்களில் ஒன்றில் எழுத்தாணியும், ஒன்றில் மோதகமும், ஒன்றில் யானைத்தோட்டியும், ஒன்றில் பாசமுமுளவெனவும், ஐந்தாவது திருக்கரம் துதிக்கையெனவும் புராணங்கள் கூறுதற்கும் — எழுத்தாணியானது விதியெழுதுங் கருவி. அது பிரமாவின் கிருத்தியமாகிய சிருட்டியையும், மோதகமானது திதி கர்த்தாவின் கிருத்தியமாகிய போசித்தலையும், யானைத்தோட்டியானது மும்மலத்தை நாசஞ்செய்து அடக்கும் உருத்திரன் கிருத்தியமாகிய மல சங்காரத்தையும், பாசமானது மறைத்தலாகிய மகேசுரன் கிருத்தியத்தையும் துதிக்கையானது பரிசம் நாற்றமாகிய இரண்டும் அத்துவிதமாயுள்ளதாகையால் ஆன்மாக்களிடத்து உயிர்க்குயிராயிருந்து பக்குவாபக்குவமறிந்து அருளலாகிய சதாசிவத்தின் அனுக்கிரக கிருத்தியத்தையும் குறிக்கும்.

'யானை முகத்தனை' யென்றதில் யானைமுகம் பஞ்ச கிருத்தியத்தாண்டவம் நடக்கும் பொருட்டு

அ — ஆகிய சிவமும்
உ — ஆகிய சத்தியும்
ம் — ஆகிய குடிலையிற்றிருக்கண் சாத்தியத்தாலுண்டான
பிரணவ சொரூபம்.

பார்க்கவ புராணத்தில் இறைவன் சர்வ சங்காரத்தில் ஆன்மாக்களைத் தம்மிடத்தில் ஒடுக்கி வைத்து அவைகள் இளைப்பாறிய பின் தனுகரணபுவன போகங்களை யளித்து முத்தியிற் சேர்க்குநிமித்தம் மீளவும் சிருட்டியாதி தொழில்களை நடப்பித்தற்கு திருவுளங்கொண்டு விநாயகராகச் சகளீகரித்து பிரமன் விஷ்ணு உருத்திரன் இவர்களை யுண்டாக்கி சிருட்டியாதி தொழில்களைச் செய்யும்படி கட்டளையிட அவர்கள் அத்தொழில்களை யெவ்வாறு செய்வதோ கடாட்சித் தருளவேண்டுமென்று கேட்க அவர்களைத் தனது துதிக்கையிலிருக்கின்ற புழையின் வழியாக எடுத்துவிழுங்கவே அவர் வயிற்றினுள்ளிருந்து பார்க்குமளவில் அதில் அளவிறந்த அண்டங்களும், விசித்திர சிருட்டிகளும் காணப்பட்டன என்று ஓதப்பெற்றுள்ளது.

" ஆன்மாக்களைத் தம்மிடத்தில் ஒடுக்கிவைத்து " என்றதின் கருத்து முதல்வனுக்கு அபின்னமாயுள்ள சிற்சத்தி சந்நிதிப்பட்டிருக்கும் குடிலையில் ஒடுக்கிவைத்து என்பதாம்—மீளத் தோற்றுவித்தலும் இக்குடிலையினின்று தான் :— இதை

ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே வுதித்த சராசரம்
ஓங்கா ராதீதத் துயிர்மூன்று முற்றன
ஓங்காரஞ் சீவ பரசிவ ரூபமே.

என்னும் மந்திரத்தாற் காண்க :—

இதைத்தான் விநாயகர் வயிற்றினுள்ளிருந்து அளவிறந்த அண்டங்கள் முதலிய புலப்பட்டன வென்பது.

சித்தாந்த நூல்களில் மாசங்கார முடிவின்கண் உலகங்களை மீளப்படைத்தற்பொருட்டுப் பரம சிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கிய வழி வேதாகமங்கள் குடிலையினின்று தோன்றினவெனக் கூறுவதும் மேற்கூறிய கருத்தையே விளக்கும்.

இவ்வுண்மையைக் கந்தபுராணம் கூறும் விநாயகர் உற்பவ வரலாற்றினும் காணலாம். அவ்வரலாறு பின் வருமாறு :—

கயமுகனென்னும் அவுணராசன் தவமுயற்சியால் தேவேந்திரன் முதலியோர் வணங்கக் கொடுங்கோல் செலுத்தி வருகின்ற காலத்தில் ஒருநாள் தன்னைப் பணிந்த தேவர்களை நோக்கி " இன்றுமுதல் நீங்கள் நம்முடைய சபைக்கு வரும்போதெல்லாம் சிரத்தில் மூன்றுதரம் குட்டிக்கொண்டு கரங்களை மாறி இரு செவிகளையும் பற்றி மூவிசை இறங்கி யெழக்கடவீர் " எனக்கட்டளையிட்டான். அவ்வாறே அவனுணைக்கஞ்சி நாடோறும் நடந்துவந்த தேவர்கள் இதனைப் பிரம விஷ்ணுக்களுக்கு முறையிட அவர்கள் இவர்களைத்தேற்றித் திருக்கயிலைக்கு அழைத்துப்போய் ஆலயத்திற்சென்று பரமசிவத்தை வணங்கிக் கயமுகனைக் கொன்று தங்கள் துன்பத்தை நீக்கிக் காக்கவேண்டுமென்று போற்றினர் இறைவன் இறங்கி ' நாம் ஒரு பிள்ளையைப் படைத்து உங்களிட்டப்படியே செய்விப்போ " மென்று திருவுளம்பற்றினன். அதை விஷ்ணு முதலானவர் கேட்டு தத்தம் பதவிகளிற் சேர்ந்தனர்.

சில காலத்திற்குப் பின்பு இறைவன் தனது வாமபாகத் தமர்ந்த பராசத்தியின்மேற்றிருக்கண் சாத்தி " நமது நந்தவனத்தின் சிறப்புகளைப் பார்த்து வருவோம் " என்று அழைத்துச் சென்று அச்சோலை நடுவிற் சொர்னமயமாய்ச் சித்திரங்களமைந்த மண்டபத்திற் புக்கனன். அப்போது பார்ப்பதியார் அதனிடத்தடங்கிய ஓவியங்களை நோக்காநிற்கையில் ஆதியாய் விளங்கா நின்ற

தனியெழுத்தானது பரமனுணையால் ஈருருக்கொண்டு யானைபோற்றேன்றிற்று. உமையவள் பார்த்ததும் அவ்வுருக்கள் களிறும் பிடியுமாகிப் புணர்ச்சியில் முயன்றன. இது யாது காரணம் பற்றியென எண்ணிய பராசத்தி தன்னேடு பொருந்தி நிற்கும் முதல்வனை வணங்கி "இறைவனே மூலமாகிய தனியெழுத்தானது யானையுருவாய்ப் புணர்வது ஏன்? அருளவேண்டும்" என, இறைவன் "தேவியே! உன் அருட்பார்வையால் முன்பு பிரபஞ்சத்துக்கெல்லாம் காரணமாயுள்ள பழமையான தனியெழுத்தானது ஈருருக்கொண்டு அன்பினுல் ஆனைகளைப்போற் புணர்வதால் நினது பெருங்கருணையை நீயே நினைக்கவல்லாய்" என்று திருவாய்மலர்ந்தருளினன். அவ்விரண்டு யானைகளும் இன்பமுற்றி முன்போற் குடிலையிலடங்கின. உடனே முக்கண், நால்வாய், மும்மதம் முதலியவைகளோடு பிள்ளையார் அவதரித்தார். இறைவன் பிள்ளையாரை வாழ்த்தி "குமாரனே! உலகங்களை யலைத்துக்கொடுங்கோற் செலுத்தும் கயமுகா சுரனைச் சங்கரித்து முகுந்தன் முதலானேர் இடுக்கண்களைத் தவிர்த்து வருவாய்" எனக் கட்டளையிட்டார்.

ஈண்டுக் கயமுகா சுரனென்றது ஆணவம் மாயை கன்மமென்னும் மும்மலங்களை. இவைகள் கண்ணுக்குத் தோன்றுவன வல்லவாதலால் காட்சிப் புலனுய் எளிதிலறியப்படுவனவாகிய ஐம்பொறிகளைக் குறிக்கும் யானையாக உருவகம் செய்யப்பெற்றன. இக்கருத்து இந்நூலில் "ஐந்திந்திரியம் அடக்குமுறைமை" என்னும் அத்தியாயத்தில்

"முழங்கி யெழுவன மும்மத வேழம்
அடக்க அறிவெனுங் கோட்டையை வைத்தேன்"

என்னும் மந்திரத்தாற் காண்க :— மும்மலங்களாகிய ஆனையை யடக்கக்கூடியது பிரணவமாகிய கோட்டையே.—

பஞ்ச கிருத்தியத்தாண்டவத்தின் கருத்து ஆன்மாக்களுக்கு மாயையின் கண்ணே தநு கரண புவன போகங்களை அருளி அவர்களை உபாதித்து நிற்கும் மும்மலங்களையும் நாசஞ்செய்து முத்தி யளிப்பதாதலான், ஆன்மாக்களைத் தேவர்களாயும், மும்மலங்களைக் கயமுகனுகவும், சிவமும் சத்தியும் குடிலையிற் றிருக்கண் சாத்தியதாலுண்டான பிரணவத்தை அம்மலங்களை நாசஞ்செய்யும் விநாயகராகவும் ஆன்றேர் உருவகம் செய்தருளினர் என்க.



உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

# உ ப தே ச ம்.

---

உபதேசம் — இவ்வடசொல் உப — பக்கம்; திஸ் — காட்டல் என்னும் பகுதிகளையுடையது அஃதாவது இவ்வுலகங்களுக்கெல்லாம் அப்பாலுள்ள இறைவன் இவ்வுலகத்திலெழுந்தருளி வந்து பக்குவான்மாக்களுக்கு உண்மையைக் காட்டுவதென்பதாம்—இவ்வாறு பக்குவான்மாக்களுக்குக் குருவாயெழுந்தருளி வந்து ஞான நெறியுணர்த்துவது சிவபிரானே யென்பதும் அவ்வாறு அவர் உபதேசம் அருளாவிடில் உயிர்களுக்கு முத்தி சித்தி யாதென்பதும் :—

(i) " எல்லா வுலகிற்கு மப்பாலோ னிப்பாலாய்
நல்லா ருள்ளத்து மிக்கரு ணல்கலால்
எல்லாரு முய்யக்கொண் டிங்கே யருளலால்
சொல்லார்ந்த சற்குரு சுத்த சிவமே."

(ii) " திருவாய சித்தியு முத்தியும் சீர்மை
மருளா தருளு மயக்கமும் வாய்மை
பொருளாய வேதாந்த போதமு நாதன்
உருவா யருளா விடிலோர வொண்ணாதே "

என்னும் மந்திரங்களால் விளங்கும்.—

மேல் நல்லாரென்றது நன்மார்க்கம் அல்லது சன்மார்க்கத்தி னொழுகுந் துறவிகளை.

" சிறந்த சிவனருட் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே "

என்றதானும்.—

" துறவெனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தகன் றானே "

என்றதானுங் காண்க.—

---

# நூல்.

(1) விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா வானந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே.

(இதன்பொருள்:) விண்நின்று இழிந்து—பரமாகாயத்தினின்றிறங்கி; வினைக்கு ஈடாய் மெய்கொண்டு—(தாம் ஆட்கொள்ளத் திருவுளம் பற்றியிருக்கும் ஆன்மாக்களது) மலபரிபாகத்துக்கு ஏற்றவாறு திருமேனிதரித்து; தண நின்றதாளை தலைக்காவல் முன்வைத்து—(தமது) குளிர்ந்த பாதத்தை (ஆன்மாக்களை மலப்பிணிப்பு மீண்டும் அணுகாது) பாதுகாக்கைக்குத் தலைக்காவலாய் வைத்து; உள்நின்று உருக்கி—உயிர்க்குயிராய் நின்று (மனதைக்) கசியச் செய்து; ஓர் ஒப்பிலா ஆனந்தக்கண் நின்று காட்டி—உவமையற்ற திருவருட் பார்வையால் (முத்திநெறிகளைக் குறிப்பாற்) காட்டி; களிம்பு அறுத்தான்—பாசத்தை நீக்கினர் என்பதாம்—ஏ—அசை

(பொழிப்பு:)—இறைவன் பரமாகாயத்தினின்றிறங்கித் தாம் ஆட்கொள்ளத் திருவுளம் பற்றியிருக்கும் ஆன்மாக்களது மல பரிபாகத்துக்கு ஏற்றவாறு திருமேனிதரித்துத் தமது குளிர்ந்த பாதத்தை ஆன்மாக்களை மலப்பிணிப்பு மீண்டும் அணுகாது பாதுகாக்கைக்குத் தலைக்காவலாய் வைத்து உயிர்க்குயிராய் நின்று மனதைக் கசியச்செய்து உவமையற்ற திருவருட் பார்வையால் முத்திநெறிகளைக் குறிப்பாற் காட்டிப் பாசத்தை நீக்கினர் என்பதாம்.—

"விண்ணின்றிழிந்து" என்றதின் கருத்து "அந்தரத்தினின்றிழிந்து" என்னுந்திருவாசகத்திருவாக்கினும், "வினைக்கீடாய்மெய்கொண்டு" என்றதின் கருத்து "சித்திதருதேசிக சிறந்த வடிவங்கொண்டு' என்னும் கடவுண் மாமுனிவர் திருவாக்கினும், "தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன் வைத்து" என்றதின் கருத்து "தாளுடையான் றொண்டர் தலைக்காவல்" என்னும் உய்ய வந்த தேவநாயனர் திருவாக்கினும்; 'உண்ணின்றுருக்கி யொரொப்பிலா வானந்தக் கண்ணின்று காட்டி" என்றதின் கருத்து "உண்ணின்றுருக்கி யுலப்பிலா வானந்தக்கண்ணீர் தருவாரலன்னேயென்னும்' என்னும் திருவாசகத் திருவாக்கினும்; இறைவன் உபதேசம் அருளுமுன் திருவருட்பார்வை செய்வார் என்பது "பந்தனை யொழிவார் தம்மேற் பரிந்தருட்பார்வை செய்து" என்னும் கடவுண்மாமுனிவர் திருவாக்கினும் அமைந்துள்ளன.—

உபதேசிக்கப்படும் முத்திநெறிகளில் மன வெழுச்சி செல்லும் பொருட்டு அவைகளின் பயனாகிய பாசவீடு, சிவப்பேறு இவைகளில் பாசவீடுண்டாவதை இம்மந்திரத்திலும், சிவப்பேறு வாய்ப்பதை வரும் மந்திரத்தினும் ஆசிரியர் விளக்குகின்றார்.

(2) களிம்பறுத்தா னெங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தானருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே.

(இ-ள்:)—எங்கள் கண்ணுதல் நந்தி அருள்கண் விழிப்பித்து களிம்பு அறுத்தான்—நெற்றிக்கண்ணனாகிய எமது சிவபிரான் (மலப் பிணிப்பால் மூடப்பெற்றிருந்த) ஆன்மாக்களின் அருட்கண்ணைத் திறக்கச் செய்து பாசத்தை யறுத்து; களிம்பு அணுகாத கதிர் ஒளி காட்டி—அஞ்ஞானவிருள் அணுகாத தனது அருளொளியைக் காட்டி; பளிங்கில் பதி பவளம் பதித்தான்—பளிங்கினியல்பதாகிய ஆன்மாவில் சிவமாகிய பவளத்தைப் பதித்தான்.—ஏ—அசை.

(பொழிப்பு:)—நெற்றிக்கண்ணனாகிய எமது சிவபிரான் மலப்பிணிப்பால் மூடப்பெற்றிருந்த ஆன்மாக்களின் அருட்கண்ணைத் திறக்கச்செய்து பாசத்தை யறுத்து, அஞ்ஞானவிருள் அணுகாத தனது அருளொளியைக் காட்டிப் பளிங்கினியல்பதாகிய ஆன்மாவில் சிவமாகிய பவளத்தைப் பதித்தான் என்பதாம்

அருட்கண் விழிப்பித்து என்றதால் ஆன்மாக்களுக்கு ஞானக்கண் அனாதியாயுள்ளதென்பதும் பாசப்பிணிப்பால் மூடப்பட்டிருந்ததென்பதும் பெறப்படும்—இவ்வுண்மை:—

"ஞானத்தின் கண்ணைமறைத்த கடியதொழி லாணவத்தால்"

என்னும் திருவாக்கினும்,

களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே,

என்றதின் கருத்து:—

"சின்மய நன்னோக்காற் சிற்சொரூபம் காட்டியெனைத்
தன் மயமாக்கியே தானவனாய் நின்றாண்டி"

என்னும் எமது தாயுமான சுவாமிகள் திருவாக்கினும் உள்ளன.

பூதவிருள் எவ்வாறு ஆதித்தியன் கதிர்களை யணுகாதோ அவ்வாறு ஞான ஆதித்தியனாகிய சிவபிரான் கதிர்களைச் சூக்குமமாகிய பாசமணுகா தென்பதுணர்த்த வேண்டிக் "சளிம்பணுகாத கதிரொளி" என்றார்.—

"கதிர் ஒளிகாட்டி" யென்றதும் 'சிற்சொரூபங்காட்டி" யென்றதும் ஒரே சித்தாந்தக் கருத்தை விளக்கும். "பளிங்கிற் பவளம் பதித்தான்" என்றதும் "தன்மயமாக்கியே தானவனாய் நின்றாண்டி" யென்றதும் முத்தி நிலையில் ஆன்மாவுக்கும் இறைவனுக்குமுள்ள சம்பந்தத்தைக் குறிக்கும்—எங்கனமெனின்—பளிங்கானது யாதொரு பொருளைச் சாரினும் அதனியல்பாய் நிற்பதுபோல் ஆன்மாவிற்குப் பாசம் நீங்கி அருள்வீழ்ச்சி யுண்டாயின் அது அருளினியல்பாய் நிற்குமாதலின் என்க. இதுவே "தானாக்கி," "தன்மயமாக்கி" என்பவற்றின் கருத்து பாசம் நீங்குமுன் பாசத்தினியல்பாயும் பாசம் நீங்கிய வழி அருளினியல்பாயும் நிற்பதால் ஆன்மா அதுவதுவாய் நிற்குமென்பது. இவ்வுண்மையை விளக்கவே சிவபிரான் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு உபதேசம் அருளிய காலத்தில் "பளிங்குபோன்றதுன் தன்மை' எனவும், தாயுமானசுவாமிகளுக்கு உபதேச மருளிய காலத்தில் :—

"யாதொன்று பற்றினத னியல்பாய் நின்று
பந்தமறும் பளிங்கனைய சித்து நீ"

எனவும் கூறி யருளினர் —

முதல்வனைச் "செக்கர் மேனியன்", 'அந்திவண்ணன்" "ஒளி பவளத் திருமேனியன்" என நூல்கள் கூறா நிற்கும். இதுபற்றியே சிவப்பு நிறமாகிய பவளம் முதல்வனைக் குறிப்பதாயிற்று. சிவனடியார்கள் காவி யாடையணிவதும் சிவவேடத்தை விளக்கவே

பளிங்கிற் பவளத்தைப் பதித்த வழி, பளிங்கானது பவள வண்ணமே தன் வண்ணமாகப்பெற்று பவள வொளியின் வியாபகத்துளடங்கித் தன் சொரூபந்தோன்றாது நிற்றல்போல், ஆன்மாவானவன் சிவனடியைச் சார்ந்த வழி சிவனதெண்குணங்களும் தன்குணமாகக் கொண்டு அவனருள் வியாபகத்துளடங்கித் தன்செயலற்று நிற்பான். பவளம் எவ்வாறு பளிங்கா காதோ அவ்வாறு சிவன் ஆன்மாவாவதில்லை. ஆயினும் பளிங்கிலொட்டி நின்றும் பளிங்கின் தன்மை தன்னைத் தாக்காது நிற்றல்போல் முதல்வன் ஆன்மாக்களோடு ஒட்டியும் ஒட்டாதும் நிற்பான். 'எல்லாமா யல்லவுமாய்" என்றதும் இக்கருத்துப் பற்றியே எழுந்ததாம். பளிங்கு பவளம் ஒளியாகிய மூன்றில் ஒன்றாவது எவ்வாறு நாசமாவதில்லையோ அவ்வாறே முத்தியிலும் ஆன்மா அருள் சிவம் ஆகிய பொருள்களும் உள்பொருள்களாய் நிற்கும்—இதனை :—

" சத்தியும் நானும் சயம்புவு மல்லது
முத்தியை யாரும் முதலறிவா ரில்லை "

என்னும் மந்திரமும் வலியுறுத்தும்—

சிவபிரான் திருவருட் பார்வையால் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அஞ்ஞான விருளைப் போக்கிய பின்னர் சிவாகமத்திற் கூறப்பெற்றுள்ள அறிதற்கரிய பொருளை உபதேசிக்கத் திருவுளம் கொண்டார் என்பது :—

வாத வூரி றைவர்தம் பெரிய மாயை போலிருண் மாய்ந்துபின் னவர்பாற்
போத மாகிவந் துறுசுடர் விளக்கம் போல வேயினன் புணரியிற் றோன்ற
வேத நாதர்த மிருபத மிறைஞ்சு மெய்ம்மை யாளரை வேறுகொண் டிருந்தங்
கோது மாகமத் தறிவரும் பொருளை யுரைக்க வேநினைந் தாரற முரைத்தார்.

என்னும் திருவாதவூரர் புராணச் செய்யுளான் விளங்கும் —

ஆகமத்திலோதப் பெற்றுள்ள அறிதற்கரிய பொருள்கள் இவையென்பதைக் கீழ்வரும் மந்திரம் விளக்கும் :—

பதியும் பசுவொடு பாசமு மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்திலே—

சைவம் என்பதும் ஆகமம் என்பதும் ஒரே பொருளை விளக்கும் சொற்கள்—இதை " அமலம்பதி பசுபாசங்க ளாகமம் " என்னும் மந்திரப் பகுதியாற் காண்க. ஆ என்பது இறைவனையும், க என்பது ஆன்மாவையும், ம என்பது மலத்தையுங் குறிக்கும் அக்கரங்களாம் —

இதை மாணிக்கவாசக சுவாமிகளுக்கு உபதேசம் அருளிய காலத்தில் :—

பரந்த வான்கலை முழுதுமா கமநூற் பகுதி யும்பல சமயசாத் திரமும்
தெரிந்து சேர்ந்ததில் வாய்ந்தமுப் பொருளின் செய்தியேபொரு ளெனமநந் [ தெளிந்து
புரிந்து போந்துள சிற்றறி வனைத்தும் போக்கி யவறி வெனச்சிவ போதம்
விரித்து தோன்றுநெஞ் சுடையவித் தகரே மேன்மை யானநம் மெய்ப்பதம் [ பெறுவர்.

என்னுந் திருவாக்கானும் காண்க —

முத்திநெறிகளை யனுட்டிக்க மனவெழுச்சி சோற்பொருட்டு அம்முத்திநெறிகள் பயப்பிக்கும் பாசநீக்கம் சிவபபேறு இவைகளினியல்பை மேலை மந்

திரங்களிற் காட்டி, அறிதற்கரிய பொருள்களை சிவபிரான் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு அருளியதுபோல் ஆசிரியர் அவற்றை வரும் மந்திரத்தில் விள க்குகின்றார்.—

(3) பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம னாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே.

(இ-ள்:)—பதி, பசு, பாசம் எனப்பகர்மூன்றிற்—இறைவனும், பாசத தாற் கட்டுண்ட ஆன்மாவும், பாசமும் என நூல்கள் கூறும் முப்பொருள்களில்; பதியினைப்போல் பசு பாசம் அனாதி—இறைவனைப்போலவே ஆன்மாவும் பாச மும் அனாதியாம்; பசு பாசம் பதியினைச் சென்று அணுகா —(முப்பொருள் களும் அனாதியாயினும்) பசுவும், பாசமும் முதல்வனைச் சென்றணையாவாம்; பதியணுகின் பசு பாசம் நில்லாவே — (ஆனால்) திருவருள் அணுகில் பசுத் தன்மையும் பாசமும் நிற்கமாட்டா வென்பதாம்—ஏ—அசை

(பொழிப்பு:)—இறைவனும், பாசத்தாற் கட்டுண்ட ஆன்மாவும், பாச முமென நூல்கள் கூறும் முப்பொருள்களில் இறைவனைப்போலவே ஆன்மா வும் பாசமும் அனாதியாம். இம்முப்பொருள்களும் அனாதியாயினும் பசுவும் பாசமும் முதல்வனைச் சென்றணையாவாம்; ஆனால் திருவருளணுகில் பசுத் தன்மையும் பாசமு நிற்கமாட்டா வென்பதாம்.—

சகல சமயிகளும் பரசிவ பந்தங்களைக் குறிக்கும் பல்வேறு சொற்களை யுபயோகிக்கிறார்கள். ஆனால் மாயாவாதிகள் முதலியவர்கள் பிரமமொன்றுமே சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பதென்றும் ஏனையவெல் லாம் அவிச்சையினாற் காணப்படுவனவாகலிற் பொய்யென்றுங் கூறுதலான், அவர்களை நோக்கி நீவிர் நித்தியப் பொருளெனக்கூறும் பதிப்பொருளைப் போலவே நீவிர் பொய்யெனக்கூறும் பசுவும், பாசமும் அனாதியாம் என்பார் பதியினைப்போற் பசு பாச மனாதியெனவும், ஆன்மா சுதந்திர ஈனாதலாலும் பாசம் சடமானதாலும் பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் முதல்வன் திரு வடியை யடைதல் கூடாது திருவருளைக்கொண்டே அடைதல் கூடுமென்பார் "பதியினைச் சென்றணுகாப் பசு பாசம் பதியணுகிற் பசு பாசம் நில்லாவே" எனவும் ஆசிரியர் ஓதியருளியது — இக்கருத்தை விளக்கவே சிவபிரான் திரு வாதவூரர்க்கு உபதேசம் அருளிய காலத்தில் :—

" செய்து ளோர்பெறும் வினைப்பயன் ஒருவர் சேர்க்க வேண்டுவ தில்லெனி
[ னிதுமே
லெய்து மேலிது நுகர்வதொன் றறிவ தில்லைநீ வினை யெனிற்சட மறியா
வுய்தலாகிய நன்னெறி யுணரா வுனையு முன்வினைப் பயனையு முணர்ந்து
மைதவாமல மொழித்தருள் பிரியா வாழ்வு நல்குவம் யாமென மதிப்பாய்."

என்று திருவாய்மலர்ந் தருளினர்.—

இன்னும் "பதியணுகிற் பசு பாச நில்லாவே" யென்றதால் பதியே சுதந்திர கர்த்தாவென்பதும் பசு பாசங்களுக்கு சுதந்திரத்துவம் இல்லையென்பதும் விளங்கும். "பதியினைச் சென்றணுகாப்பசு பாசம்" என்றது பதி தூயவுடம்பினனுதலையும், இயல்பாகவே பாசத்தினீங்கியோனுதலையும், "பதியணுகிற் பசு பாச நில்லாவே" யென்றது தன்வபத்தனுதலையும் அவன் முடிவிலாற்றலுடையனுதலையும் சுட்டும். இவ்வாறே 4-வது மந்திரத்தில் "தாயினுமும்மலம் மாற்றித்தயாவென்னும்" என்றது பேரருளுடையனுதலையும்; 18 - வது மந்திரத்தில் "எவ்வாறு காண்பானறிவு தனக்கெல்லை யவ்வாறருட் செய்வானுதியன்றானும்" என்றதும், 21 மந்திரத்தில் "பெருமை சிறுமை யறிந்தென்பிரான்போல் அருமை யெளிமை யறிந்தறிவாரார்" என்றதும் இயற்கை யுணர்வினனுதலையும் முற்றுமுணர்வோனுதலையும், 11 மந்திரத்தில் "அளித்தான் பேரின்பத்தருள் வெளியென்றது" அவன்வரம்பி லின்பமுடையனுதலையும் குறிக்கும் இவ்வெண் குணங்களுமே சிவபிரான் குணங்களாம்.

இதுவேயுமன்றி இந்நூல் சிவபிரானது இலக்கணம் கூறும் வகையில்:—

1. "தானே யுலகிற்றலைவன்", "அவனை யொழிய அமரருமில்லை" என்றதால் அவனே சர்வ கர்த்தாவென்பதும்;

2. "தன்னை யொப்பா யொன்றுமில்லாத் தலைமகன்" 'தன்னொற்றொழப்படுவாரில்லை", "தேவர்க்குந்தேவன்" என்றதால் அவன் தனக்கு உவமையில்லாதான், அவனொற் றொழப்படுந் தேவர்கள் ஒருமருமில்லை, தானே பரவத்துவாயுள்ளோன் என்பதும்;

3. "படர்ந்து நின்றான் பரிபாரகமுற்றும் கடந்து நின்றான்" என்றதால் அவன் சர்வ வியாபியாயினும் 36 தத்துவங்களுக்கும் அப்பாற்பட்டவனென்பதும்;

4. "கமலம் மலருறைவான்" என்றதால் ஆறாறு தத்துவங்களுக்கப்பாற்பட்டவனாயினும் அன்பரது நெஞ்சமாகிய தாமரை மலரில் வீற்றிருப்பான் என்பதும்;

5. " பிறப்பிலி பிஞ்ஞகன் பேரருளாளன் ", " இறப்பிலி யாவர்க்கு மின்பம் அருளும் " என்றதால் பிறப்பு இறப்பு இல்லாதவன் என்பதும் ;

6. " ஐந்து வென்றனன் " என்றதால் இந்திரியங்களா லுபாதிக்கப் படாதவன் என்பதும் ;

7. " நிமலன் " என்றதால் மலத்தா லுபாதிக்கப்படாதவன் என்பதும் ;

8. " துளக்கிலன் " என்றதால், அசைவு, கலக்கம், சஞ்சலம் இவைகள் இல்லாதவ னென்பதும் ;

9. " கரையற்றவன் " என்றதால் அளவு படாதவனென்பதும் விளங்கும்

இத்தன்மையனுகிய இறைவன் பசு பாசங்களில் அத்துவிதமாய்க் கலந்து நிற்குந் தன்மையை :—

" காலினி லூறுங் கரும்பினிற் கட்டியும்
பாலினுண் ணெய்யும் பழத்து ளிரதமும்
பூவினு ணாற்றமும் போலுள னெம்மிறை
காவல னெங்குங் கலந்து நின்றானே."

என்னும் மந்திரத்தாற் காண்க.

இறைவன் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு உபதேசமருளிய காலத்தில் :—

" மன்றி லானவெம் மியல்புனக் குரைக்கின் மாசிலாவுரு மூன்று அவற் றருவ
மொன்று பேரொளி யென்றருவுருவ மொன்று தானரு ளுருவமொன்
றுணர்வாய் "

என அருளினர்.—

இம்மூன்றனுள் சிருட்டியாதித் தொழில் நடத்த இறைவன் சிற்சத்தி சந்நிதி மாத்திரையாற் றோற்றுவித்த ஒன்பதுவிதத் திருமேனியு மடங்கும் இதனை :—

" மேவும் பரசிவ மேற்சத்தி நாதமு
மேவும் பரவிந்து வைம்முகன் வேறீசன்
மேவு முருத்திரன் மால்வேதா மேதினி
யாகும் படிபடைப் போனா னுமே "

என்னும் மந்திரத்தாற் காண்க

இவ்வொன்பது பேதங்களில் சிவம், சத்தி, நாதம், விந்து ஆகிய நான்கும் அருவம். சதாசிவம், அருவுருவம். மற்றைய நான்கும் உருவம்.

இப்பாகுபாட்டை :—

" தலையான நான்குந் தனதரு வாகும்
அலையா வருவுரு வாகுஞ் சதாசிவம்
நிலையான கீழ்நான்கும் நீடுரு வாகும்
துலையா விவைமுற்று மாயல்ல தொன்றே "

என்னும் மந்திரத்தாற் காண்க.

சிவம், சத்தி, நாதம், விந்து, ஆகிய நான்கும் ஞானிகள் யோகிகள் தியானித்தற் பொருட்டும், சதாசிவம் கிரியையாளர் பூசித்தற்பொருட்டும், மற்ற மகேசுரன் முதலாய நான்கு மூர்த்திகளும் சரியையாளர்கள் வழிபடுதற் பொருட்டுமே அமைந்தனவாம். இவ்வாறு இறைவன் இந்நவ பேதங்களினின்றும் அருள் புரிபவனாயினும் அவைகளுக்கப்பாற்பட்டவனென்பதை விளக்கவே " இவை முற்றுமா யல்லதொன்றே " எனவும் ஓதப்பட்டுள்ளது. அன்றியும் உருவ பேதங்களுள் முதன்மையான மகேசுரரே மற்ற மூன்று மூர்த்திகளையும் நடத்துவார் என்பது :—

" நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கி யரன்திரு மாலவன்
மன்றது செய்யு மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்துநின் றானே."

என்னும் மந்திரத்தால் விளங்கும் —

இன்னும் முதல்வன் ஒருவனே யாயினும், அவனும் அவன் அருளும் ஞாயிறும் ஒளியும் போல இருதிறப்பட்டுச் சிவம் சத்தி யெனப் பெயர் பெற்று மேற்கூறிய அருவம் அருவுருவம், உருவம் எனும் மூன்றினும் நின்று உபகரிக்கும் தன்மையை இத்திருமந்திர ஆசிரியர் :—

" ஒன்றவன் றானே யிரண்டவ னின்னருள்
நின்றனன் மூன்றினுள் "

என முதல் மந்திரத்தின் கண்ணேயே கூறியருளினமை காண்க. —

ஆதித்தியன் ஒளி ஒரே நிறமுடையதாய்க் காணப்படினும் அதைத் தடுத்து பிரிவு படுத்தினால் இந்திர தனுவிற் காணப்படுவது போல் பல நிறங்கள் தோன்றா நிற்கும். அவைகளில் முக்கியமானவை ஐந்தாம்—இதுபோலவே இறைவன் கிருத்தியங்கள் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல்,

அருளல் என ஐவகைப்பட்டு நிற்றலால் அவைகளை நடத்தும் முதல்வன் கதிர்களும், பரை, ஆதி, இச்சை, ஞானம், கிரியை என ஐந்து பிரகாரமாய் நிற்கும். இவ்வைந்து சத்திகளின் நிறங்களும் சிவபிரான் ஐந்து முகங்களின் நிறங்களும் முறையே :—

"நடுவு கிழக்குத் தெற்குத்தர மேற்கு
நடுவு படிகநற் குங்கும வன்ன
மடைவுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை யஞ்சே"

என்னும் மந்திரத்தா லுணரலாம்.

ஐந்து முகங்களில் :—

1. ஈசானம், படிக நிறமும்
2. தற்புருடம், நல்லம் அல்லது கறுப்பு நிறமும்
3. அகோரம், குங்குமம் அல்லது செம்மை நிறமும்
4. வாமம், அஞ்சன நிறமும்
5. சத்தியோசாதம் செவ்வரத்தம் அல்லது செம்பொன் நிறமும் உடையன.

இவ்வைந்து முகங்கள் அல்லது சத்திகளே : —

1. சதாசிவன்
2. மகேசுரன்
3. உருத்திரன்
4. மால்
5 அயன் என்னும் இவர்களைக்கொண்டு அசுத்த பஞ்ச கிருத்தியத்தை நடத்தும்.

இனி உயிர் வர்க்கங்களின் பாகுபாட்டையும் முத்திநெறிகளையும் அவற்றின் பயன்களையும் குறித்துச் சிறிது கூறுவாம். ஆன்மாக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலரென மூவகையாவர். விஞ்ஞானகலர் ஆணவ மலமொன்றும், பிரளயாகலர் ஆணவ மலம் கன்ம மலம் என்னும் இரண்டும், சகலர் ஆணவ மலம், கன்ம மலம் மாயை மலம் என்னும் மூன்றும் உடையோராவர். விஞ்ஞானகலர் அட்டவித்தேசர், அநந்தர் முதலியவர்களாம். பிரளயாகலர் நூற்றெட்டு உருத்திரர்களாம். சகலர் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களும் நரர்களுமாம்.

இவ்விவரங்களை

(1) " ஆகின்ற கேவலத் தாணவத் தானவர்
ஆகின்ற வித்தேச ராமநந் தாதியர்
ஆகின்ற வெண்ம ரெழுகோடி மந்திரர்
ஆகின்ற வீச ரனேகரு மாமே "

*  *

(2) " இரண்டாவ துள்ளே யிருமலப் பெத்தர்
திரண்டாகு நூற்றெட்டு உருத்திர ரென்பர் "

(3) " சகல வவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்
நிகரின் மலரோன்மா னீடுபல் தேவர்கள்
நிகழ்நரர் கீட மந்தமு மாமே "

என்னும் மந்திரங்களாற் காண்க

இம்முத்திற உயிர்களுள் மும்மலத்தராகிய சகலருக்கே முதல்வன் முத்தி நெறிகளை யருளியது.

முத்திநெறிகள் :—

1. தாசமார்க்கம்
2. சற்புத்திர மார்க்கம்
3. சக மார்க்கம
4. சன் மார்க்கம்—என நான்கு பிரகாரமாய் நிற்கும்—இவைகளே

(1) சரியை. (2) கிரியை (3) யோகம், (4) ஞானமெனவும் முறையே வழங்கப்பெறும்—

இம்மார்க்கங்களின் இலக்கணம் வரும் மந்திரங்களான் விளங்கும.

( i ) " எளியன நீப மிடயலர் கொய்த
லளிதின் மெழுக லது தூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளி தொழில் செய்வது தான்தாச மார்க்கமே "

( ii ) " பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திட
லாசற்ற நற்றவம் வாய்மை யழுக்கின்மை
நேசித்திட் டன்னமு நீ சுத்தி செய்தன்மற்
றாசற்ற சற்புத்திர மார்க்க மாகுமே "

(iii) " ஆதார சோதனை யானடி சுத்திகள்
மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி
போதா லயத்துட் புலன் கரணம் புந்தி
சாதார ணங்கெட லாஞ்சக மார்க்கமே "

(iv) " பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்
தொசியாத வுண்மைச் சொரூபோத யத்துற்
றசைவான தில்லாநெம யானசன் மார்க்கமே "

இந்நான்கு மார்க்கங்களும் முறையே :—

(i) அரும்பு.
(ii) மலர்.
(iii) காய்.
(iv) கனிபோல் வனவாம் என்பதை

" விரும்புஞ் சரிதை முதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்பு மலர் காய் கனி போலன்றோ பராபரமே "

என்னுந் தாயுமானுர் திருவாக்காற் காண்க.

காய் முற்றியே கனியாவது போல், யோக சாதனையிற் சித்தி பெற்றவர்கட்கே ஞானத்திலிச்சை செல்லும் ஆயினும் விட்ட குறையாற் சில பக்குவான்மாக்களுக்கு ஞானத்தின்கண் இச்சை யெழுமாயின் அவர்கள் முற்பிறப்பில் யோகானுட்டிப்பிற் சித்தி பெற்றவர்களே யாம். இதனை

" யோகியர்க்கே ஞான மொழுங்காம்பே ரன்பான
தாகியரும் யோகமுன்னே சான்றோர் பராபரமே "

என்னுந் திருவாக்காற் காண்க

இந்நான்கு முத்தி மார்க்கங் ளின் பயன் முறையே.—

(i) சாலோகம்
(ii) சாமீபம்.
(iii) சாரூபம்.
(iv) சாயுச்சியமென்பனவாம்

இறைவர் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு உபதேசஞ்செய்த காலத்தில்:—

(i) சரியை யியற்ற வல்லார்க்கு "எம்முலகம் அளிப்போம்" எனவும்.

(ii) கிரியை யியற்ற வல்லார் "எம்மருங்கிருப்பார்" எனவும்.

(iii) யோகமனுட்டிக்க வல்லவர்கள் "எம்முருப்பெறுவார்" எனவும்.

(iv) ஞானிகள் "எம்மெய்ப்பதம் பெறுவார்" எனவும் ஓதி யருளியது காண்க

ஞானிகள் எம்மெய்ப்பதம் பெறுவார்கள் என்றதால் சாயூச்சியமொன்றுமே நிலையான மெய்ம்முத்தியென்பது விளங்கும். இதுபற்றி யன்றே எமது தாயுமானசுவாமிகள் :—

" சாலோக மாதி சவுக்கியமும் விட்ட நம்பான்
மேலான ஞானவின்ப மேவு நாளெந்நாளோ "

எனவும், திருமூல சிவசித்தர்,

" பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்
டிதமுற்ற பாசவிருளைத் துறந்து
மதமற் றெனதுயான் மாற்றிவிட் டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே "

எனவும் திருவாய் மலர்ந்தருளினர்.

பக்குவான்மாக்களை இறைவன் இரக்ஷிப்பது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம், என்னும் நால்வகைச் சத்திநிபாதத்தால் என்ப—இவைகளில் :—

மந்ததர இயல்பைக் கீழ்வரு மந்திரங்கள் விளக்கும்.

(1) " இருட்டறை மூலையி லிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடற் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தாளே "

* * *

(2) " இருணீக்கி யெண்ணில் பிறவி கடத்தி
அருணீங்கா வண்ணமே யாதி யருளும்
மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருணீங்கா வின்பப் புலம்பயில் தானே "

இம்மந்திரங்களின் திரண்ட கருத்து. மலமறைப்புச் சற்றும் நீங்காது இருளடைந்திருந்த ஆன்மா பக்குவ மாதற்பொருட்டு மலத்திற்கனுகூலமாயுடன் நின்றருள் புரிந்து வந்த திரோதான சத்தி மல மறைப்பால் அப்பிரகாச

மாயிருந்த ஆன்மாவின் ஞானத்தைப் பிரகாசிக்கச் செய்து பலவித உபாயங்க ளால் அவனோடு அத்துவிதமாய்ப் பொருந்தி நின்று எண்ணிறந்த பிறவிகளி னின்று கரையேறச் செய்து பின்பு மறைப்புத் தன்மை மாறி பாரசத்தியே யாய் உண்மைப் பொருளாகிய திருவடி யின்பத்தைப் பயப்பிக்குமென்பதாம்.

"இருட்டறை மூலையிலிருந்த குமரி", "குருட்டுக் கிழவனைக்கூடற் குறித்து" என்றதால் பாலில் நெய்தோன்றாது நிற்றல் போலும் "குருட் டினை நீக்கிக் குணம் பல காட்டி மருட்டி யவனை மணம் புரிந்தாள்" என்றதால் காய்ச்சின அல்லது கடைந்த பாலில் நெய் தோன்றி நிற்றல் போலவும், மந்த தா மல பாகமுடையார்க்குத் திருவருள் தோன்றாதும் ஒருவாற்றால் தோன் றியும் உடனாய் நிற்குமென்பது பெற்றாம்

மந்த இயல்பை :—

(1) மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே.

* * *

(2) கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பாஞ்சுடர்
வண்டுகொண் டாடு மலர்வார் சடையண்ணல்
நின்றுகண் டார்க்கிரு ணீக்கிநின் றானே.

என்னும் மந்திரங்களால் விளக்கி யருளினார்.—

"மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி" யென்றது ஆன்மாக்களுக்கு புலப்படாது அவர்களோடு அத்துவிதமாய் மறைந்து நின்று பக்குவப்படுத்திய பின்னர் பிரபஞ்ச மயக்கத்தை நீக்கி என்பதையும். "வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்து" என்றது, காகக்கூட்டமானது ஒரு கல் வீழ்ச்சியால் எவ் வாறு பயமுற்றுக் கலங்தோடுமோ அவ்வாறு அருள் வீழ்ச்சியால் மலம் வெரு ண்டோட இன்பம் விளையுமென்பதையும். "பண்டு பண்டோயும் பரமன் பாஞ்சுடர்" "வண்டு கொண்டாடும் மலர்வார் சடையண்ணல்" "நின்று கண்டார்க்கிருணீக்கி நின்றானே" என்றது, இனிமையாகிய தோத்திரப் பாக்களுள் கலந்து நிற்கும் சிவபிரானது உருவத்திருமேனியை வழிபடுமவர் களுக்கு அஞ்ஞான விருணீங்குமென்பதையும் விளக்கும் இது பற்றியே "மந்தம்" உருவத் திருமேனியை வழிபடுவதாகிய சரியை முதலியவற்றிற் குக் காரணம் எனவும், பழத்தின் சுவை, யாராய்ந்தறியும் வழி விளங்கித்தோ

ன்றுவதுபோல் மந்த மல பாகமுடையார்க்குத் திருவருள் ஆராய்ந்தறியுர் வழி விளங்கித் தோன்றுமெனவும் கூறுவது.

" மயக்கம் " என்பதின் கருத்தை எமது பட்டினத்தடிகள் ' மாதர் பிரபஞ்ச மயக்கத்திலே விழுந்து, போதமயங்கிப் பொறியழிந்தேன் " எனவோதியதாற் காண்க. " பண்டு பண்டோயும் பரமன் " என்றதின் கருத்தையே இந்நூலாசிரியர்,

" இன்னிசையுள்ளே எழுகின்ற வீசனை " எனவும்.

தாயுமானுர் :— " பாமாலைக்கே நீ தான் பக்ஷமென்று " எனவும்

மாணிக்கவாசக சுவாமிகள் :—

" இன்னிசை வீணையிலிசைந்தோன் காண்க. "

எனவும் பாடி யிருக்கின்றனர்.

" வெருட்டி வினையறுத்தின்பம் விளைத்து " என்றதின் கருத்து :—

" காக மானது கோடி கூடி நின்றாலு மொரு
கல்லின் முன் எதிர் நிற்குமோ
கர்மமா னதுகோடி முன்னே செய்தாலு நின்
கருணைப் பிரவாக வருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ "
* * *

என்னும் திருவாக்கால் விளங்கும் —

தீவிரத்தினியல்பை கீழ்வரும் மந்திரங்கள் விளக்கும்

(1) பிறப்பை யறுக்கும் பெருந்தவ நல்கு
மறப்பை யறுக்கும் வழிபட வைக்கும்
குறப்பெண் குவிமுலைக் கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்ய நின்றார்க்கே.

(3) நணுகினு ஞானக்கொழு ந்தொன்று நல்கும்
பணிகிலும் பன்மலர் தூவிப் பணிவன்
அணுகிய தொன்றறி யாத ஒருவன்
அணுகு முலகெங்கு மாவியு மாமே.

வழிபாடு அகப்பூசை, புறப்பூசை என இருவகைபபடும் இவ்விரண்டனுள் அகவழிபாடு சிறந்த பூசை இதை " நீ பரன்றன்னை நெஞ்சினினை வையேனிறைந்த பூசை " என்னும் சிவஞான சித்தியார்ச் செய்யுளாற் காண்க —

இம்மந்திரங்களின் பொருள் :—குவிமுலை கோமளவல்லி குறப்பெண்—அருட்பால் சுரக்கும் திரண்ட அமுதகத்தையுடைய தெய்வச் செல்வியாகிய மலைமகள் ; சிறப்பொடு பூசனை செய்ய நின்றார்க்கே—அகப்பூசையால் வழிபடுபவர்களுக்கே ; பிறப்பை அறுக்கும் பெருந்தவம் நல்கும்—பிறவிப் பிணியைப் போக்கி மேலான தவத்தைக் கடாட்சிக்கும் ( அப்படிக் கடாட்சித்து ) மறப்பை அறுக்கும் வழிபட வைக்கும்—இறைவன் உபகரித்து வரும் பெருங் கருணையை மறந்திருந்த ஆன்மாக்களுக்கு அம்மறப்பினை மாற்றி அவனை விருப்பபடி வழிபடச் செய்வாள்

( அகப்பூசையே சிறந்ததாயினும் ),

அணுகியது ஒன்று அறியாத ஒருவன்—( அருட்கண் ணில்லார்க்கு ) அருகிலிருந்தும் தோன்றாத இறைவன் ; அணுகும் உலகெங்கும் ஆவியுமாமே—( அருட்கண் திறக்கப்பெற்ற ஆன்மாவுக்கு ) உலகெங்கும் பூரணமாய் நிறைந்து உயிர்க்குயிராய் நிற்குமுண்மை விளங்கத்தோன்றுவன் ; (ஆதலால்) பணிகிலும் பன்மலர் தூவி பணிவன்—(உட்பூசை யொழிந்து புறத்தொழிலானும் சிவபிரான் திருவடிகளை அர்ச்சிக்கவேண்டுமென்கிற இச்சையுண்டாகில் பலவித புட்பங்களைக் கொண்டு அர்ச்சிப்பன் ; நணுகிலும் இவ்வாறு புறப் பூசை செய்தாலும், ஞானக்கொழுந்தொன்று நல்கும்—ஞானமூர்த்தியாகிய இறைவன் ஒப்பற்ற தனதருளைத் தருவன்.

(க—ரை.)—அகப்பூசையே விசேடித்ததாயினும் சிவபிரான் எங்கும் பூரணமாய் நிற்கும் உண்மையை அறிந்தவர்கள் உட்பூசையையும், புறப்பூசையையும் ஒரு நீர்மையவாகக் கொண்டு வழிபடுவார்கள் என்பதாம்.

சிவபிரான் எங்கும் பூரணமாய் நிற்பதை யறிந்த ஞானிகளை எமது தாயுமானார் :—

" திக்கொடு கீழ்மேலும் திருவருளாம் பொற்பறிந்தோர் "

எனவும் ;

" அணுகிய தொன்றறியாத ஒருவன் " என்றதின் கருத்தை இந்நூலாசிரியரே :—

" பக்கநின்றார் அறியாத பரமனை " எனவும் விளக்கியது காண்க.—

" தாவியவ னுடனிருந்தும் காணாத தற்பரனை " என்னும் திருஞானசம்பந்தர் திருவாக்கானும் காண்க.

இம்மந்திரங்களில் சிவபிரானைப் புறத்தொழிலானும் அகத்தொழிலானும் வழிபடுவதாகிய கிரியை மார்க்கம் விளக்கப்பெற்றுள்ளது. இது பற்றியே தீவிரம் கிரியைக்குக்காரணம் எனவும் தீவிர மலபாக முடையார்க்கு எள்ளின்கண் எண்ணெய் இனிது விளங்கித் தோன்றினும் பிறித்தறியப்படாதது போல திருவருள் விளங்கித் தோன்றினும் பிறித்தறியப்படாது உடனாய் நிற்குமெனவும் சித்தாந்த நூல்கள் கூறா நிற்கும்.

தீவிரதர இயல்பை வரும் மந்திரங்கள் விளக்கும் :—

(1) இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனு ஞானத்தாற் றன்செய லற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே

(2) இரவும் பகலுமிலாத விடத்தே
குரவஞ் செய்கின்ற குழலியை யுன்னி
அரவஞ் செய்யாம லவளுடன் சேரப்
பரிசொன்றி லாளும் பராபரை தானே.

(3) மாலை விளக்கு மதியமு நாயிறுஞ்
சால விளக்குந் தனிச்சுட ரண்ண லுள்
ஞானம் விளக்கிய நாதனென் னுள் புகுந்
தூனை விளக்கி யுடனிருந் தானே.

(இ-ள் :)—இருவினை நேர் ஒப்பில்—(சரியை கிரிகைகளைத் தலைப்பட்டு அவைகள் முற்றிப் பின்னர்) இருவினை யொப்பு நிகழுங்காலத்தில் (வீடடைய வேண்டுமென்கிற விருப்பெழுந்த அவசரத்தில்) இன் அருட் சத்தி—பேரின்பத்தை அளிக்கும் அருட் சத்தியே; குரு என வந்து—குருவாய் எழுந்தருளி வந்து; குணம் பல நீக்கி—பல பிரகாரமாய் நிற்கும் மாயா குணங்களை மாற்றி; தரும் எனும் ஞானத்தால்—(திருவடிப் பேற்றை) அருளும் என்று நூல்கள் போற்றும் ஞானமார்க்கத்தால்; தன்செயல் அற்றால்—தற்போதம் நாசமானால்; திரி மலம் தீர்ந்து—ஆணவாதி மும்மலங்களும் நீங்கி; அவன் சிவனாம்—ஆன்மா சிவத் தன்மை யெய்துவான்.

இரவும் பகலும் இலாதவிடத்தே—இரவு பகல் தோன்றாத சுத்தாவத்தையில்; குரவம் செய்கின்ற குழலியை யுன்னி இயற்கை நறுமணம் வீசும் கூந்தலையுடைய அருட் சத்தியை அகத்தே வழிபட்டு; அரவம் செய்யாமல்

அவளுடன் சேர—(மனம் வாக்குக் காய முதலிய எல்லாக் காணங்களின் தொழில்களையுமடக்கி) மௌன மாக்கி அவ்வருட் சத்தியோடு அத்துவிதமாய் நிற்கில்; பரிவு ஒன்றிலாளும்—மலத்திற்கனுகூலமாய் கருணை மறமாகிய செய்கையை யுடையவளாயிருந்த திரோதான சத்தியே (அச்செய்கைமாறி); பராபரை தானே (ஆம்)—பராசத்தியேயாய் அருள் புரிவாள்; (அவ்வாறு அருள் புரியவே).

மாலை விளக்கும்—மாலைப்போதில் ஏற்றப்படுந் தீபத்தையும்; மதியமும்—சந்திரனையும்; ஞாயிறும்—சூரியனையும் (தன் சுதந்திர வொளியினால்) சால விளக்கும் தனி சுடர் அண்ணல்—நன்றாய் விளக்கஞ் செய்யும் ஒப்பற்ற சோதி சொரூபனாகிய இறைவனும்; உள் ஞானம் விளக்கிய நாதன்—அகத்தே ஞானத்தை விளக்கிய நாதனுமாகிய சிவபிரான்; என் உள் புகுந்து—எனது ஆன்மாவிற் புகுந்து; ஊனை விளக்கி—என் உடம்பையும் (சரீர சித்திகை வல்யத்தால்) சிறப்படையப் பண்ணி; உடன் இருந்தான்—என்னை விட்டு நீங்காதிருந்தான் என்பதாம்—

இம்மந்திரங்களின் கருத்து இருவினை யொப்பு நிகழப்பெற்ற ஆன்மாக்களுக்குத் திருவருளே குருவாய்த் தோன்றி மாயா குணங்களை மாற்றத் தற்போதம் நாசமாய் உண்மை நிட்டை கைகூடித் திருவருளோடு அத்துவிதமாய் நிற்கச் சிவதரிசனமும் ஐக்கியமும் கைகூடும் - என்பதாம்.—

இது பற்றியே தீவிரதரம் யோக ஞானங்களுக்குக் காரணமெனவும், பரமுத்தி பயப்பிக்குமெனவும் தீவிரதர மலபாகமுடையவர்களுக்கு சிவபிரான் உள்ளத்தே விளங்கித் தோன்றித் தீயிரும்பைச் செய்வது போல் உயிர்களைத் தன் வண்ணமாக்கி பேரானந்தப் பெருஞ் செல்வத்தை யருளுவாரெனவும் நூல்கள் கூறும்.—

(வி—ரை:)—திருவருள் குருவாயெழுந்தருள் வந்து உபதேசமொழிகளை யருள, நான் எனது என்னும் அகங்கார மமகாரங்கள் நீங்கி ஆன்ம தரிசனமும், திருவருளை அகத்தே வழிபடில் பரைதரிசனமும் அத்திருவருளோடு அத்துவிதமாய் நிற்கில் சிவதரிசனமும் ஐக்கியமும் கைகூடும்.—இக்கருத்து

"மாய நட்போரையும் மாயமலமெனு மாதரையும்
வீய விட்டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாம்
தாயுடன்சென் றுப்பின் தாதையைக் கூடிப்பின் றாயைமறந்
தேயும தேநிட்டையென் றானெழிற் கச்சியே கம்பனே"

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கால் விளங்கும். —

தீவிர தரமும் சுத்தாவத்தையும் ஒரே சித்தாந்தக் கருத்தை விளக்கும். இதனை 9-வது மந்திரத்தின் கீழ்க் குறிக்கப்பெற்றுள்ள மந்திரத்தானும் சித்தியார்ச் செய்யுளானும் காண்க.—

பாசத்தினியல்பாவது :—பாசம். ஆணவம், மாயை, கன்மமென மூன்று விதமாயிருக்கும். இம்மூன்றும், நெல்லின்கண் உள்ள அரிசியோடு சகசமாய் நிற்கும் முளை, தவிடு, உமி இவைகளைப்போல் உயிர்களோடு சகசமாய் நிற்பனவாம்—ஆன்மாக்கள் சரியையாதி முத்தி நெறிகளை யனுட்டித்து திருவருளால் இம்மும்மலங்களும் அவைகளை விட்டொழியின், முளை, தவிடு, உமி இவைகள் நீங்கப்பெற்ற அரிசி யெவ்வாறு முன்போல வேறொரு நெற்றோன்றுதற்குக் காரணமாகாதோ, அவ்வாறு உயிர்களுக்குப் பிறப்பிறப்பற்று சிவபிரான் திருவடிப் பற்றன்றி வேறு பற்றில்லை —இக்கருத்து அடியில்வரும் மந்திரங்களால் விளங்கும் :—

" பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாச மறுத்தாற் -
பசுக்க டலைவனைப் பற்றி விடாவே "

" ஆணவ மாயையுங் கன்மமு மம்மலங்
காணு முளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே."

ஆணவ மலமானது ஆன்மாவோடு சகசமாய் நின்று அவ்வான்மாவைப் பதி பசு பாசங்களி னுண்மையை அறியவொட்டாது ஞானத்தை மறைத்து நிற்றலால், ஆன்மாவானவன் அதிமூட நித்திராவத்தை யெய்தி நிற்பான்—இவ்வாறு துயிலும் ஆன்மாவிற்கு இறைவன் மாயையின் கண்ணே தனுவாதிகளையருளி அவனை நித்திரையினின்று எழுப்பவன். அதனை :—

" ஆசான் முன்னே துயில் மாண வகரைத்
தேசாய தண்டா லெழுப்புஞ் செயல்போல்
நேசாய வீசனு நீடா ணவத்தரை
எசாத மாயாடன் ஞலே யெழுப்புமே."

என்னும் மக்திரத்தால் விளக்கியிருக்கின்றார்.

சிருட்டியின் கருத்தும் ஆன்மாவிற்கு அறிவை விளக்கி முத்தியளிப்பதாம் :—

" சத்தி சிவன்விளை யாட்டா லுயிராக்கி
ஒத்த விருமாயாக் கூட்டத் திடையூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே.'

என்னும் மந்திரத்தாற் காண்க —

" உயிராக்கி " யென்றது ஆணவ மலத்தாற் கட்டுண்டு கிடந்த ஆன்மாக்களை யெழுப்பி என்பதையும், " ஒத்த இருமாயாக் கூட்டத் திடையூட்டி " என்றது சர்வ சங்காரத்தில் ஆன்மாக்கள் பிறந்திறந்துழன்ற இளைப்பு நீங்கும் பொருட்டு அவைகளைச் சுத்த அசுத்த மாயைகளில் ஒடுக்கிவைத்துப் பின்னர் அவைகளைப் பொருந்தி நின்ற மாயையின் கண்ணே மீட்டும் தனுவாதிகளைச் சர்வசிருட்டியில் டத்துவத்திற்கேற்றவாறு அருளி, அதாவது முன் செய்த நல்வினை தீவினைகளுக்குத் தக்க தனுவாதிகளை யருளி, பூமி நரகம் சுவர்க்கம் இவைகளிலுண்டாகும் போகங்களைப் புசிப்பித்து என்பதையும், தனுவாதிகளை யருளுவது பாசநோய்க்கு மருந்தாக வென்பதையும் விளக்கும் இக்கருத்து:—

" வீட்கும் பதிபசு பாசமு மீதுற
வாட்கு மிருவினை யாங்கவற் றுலுணர்ந்
தாட்கு நரக சுவர்க்கத்திற் றுனிட்டு
நாட்குற நான்றங்கு நற்பாச நண்ணுமே "

என்னும் மந்திரத்தி லமைந்துள்ளது.

இதக றுங் கூறியவாற்றுல் மறைத்தலைச் செய்வது ஆணவமலமென்பதும் அம்மறைப்பை நீக்குவது மாயை யென்பதும் இதுபற்றியே ஆணவமலத்தை யிருளெனவும் மாயாமலத்தை அவ்விருளைக் கெடுக்கும் விளக்கெனவும் கூறுவதென்பது விளங்கும்.

ஒரு மலத்தின் சத்தி மற்றொரு மலத்தால் எவ்வாறு கெடுமெனில், ஆடையைப்பற்றி நிற்கும் அழுக்கை உவர்மண்ணாகிய அழுக்குப் போக்குவது போலென்க. இதை :—

" ஆது மறுவை யழுக்கேற்றி யேற்றல்போல் "

என்னும் மந்திரத்தாற் காண்க

கன்மமாவது புண்ணிய பாவமாம்— இப்பூமியின் கண்ணே சிலர் செல்வர்களாயும், சிலர் வறியர்களாயும், சிலர் அறிஞர்களாயும், சிலர் அறிவீனர்களாயும் இருப்பதும், யாவரும் இன்பத்தை வேண்டினும் சிலர் இன்பத்தையும் மற்

றையோர் துன்பத்தையும் அனுபவித்தலும், பலர் ஒரேவிதமான முயற்சி செய்யினும் சிலர் ஆக்கத்தையும் மற்றையோர் ஏக்கத்தையும் அடைதலும் நாம் கண்கூடாய் காணும் உண்மைகளாதலால் இவைகளுக்கேது கன்மமென்பது விளங்கும்.

இம்மும்மலங்களோடு திரோதாயி அல்லது திரோதானம், மாயேயம், அல்லது மாமாயை, அல்லது மாயாகாரியம் என்னுமிரண்டுஞ் சேர்ந்து பாசம் ஐவகைப்படும்

" சத்தி யிராகத்திற் றூனல் லுயிராகி
ஒத்துறு பாச மலமைந்தோ டாறுறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தன னீசன் மயமறு மாறே "

" ஆணவ மாகு மதீதமேன் மாயையும்
பூணுந் துரியஞ் சுழுத்திப்பொய் காமியம்
பேணுங் கனவு மாமாயை திரோதாயி
சாணு நனவின் மலக்கலப் பாகுமே."

என்னும் மந்திரங்களாற் காண்க.—

இப்பஞ்ச மலத்தையும் பொருந்தி நிற்பதாற்றான் ஆன்மாவானவன் சனன மரணங்களை யடைந்து இப்பூமி முதலிய மூவுலகங்களிலும் சுழன்று நிற்பான். இவ்வைமலங்களும் திருவருளால் நீங்கும்.

" கறங்கோலை கொள்ளி வட்டங் கடலிற்
றிரைநிறஞ் சேர்மத்தின் மலத்தினி னின்ற
திரங்சாண் சுவர்க்க நரகம் புவிசேர்ந்
திரங்கா வுயிரரு ளாலிவை நீங்குமே."

என்னும் மந்திரத்தாற் காண்க.—

இவ்வைவகைப் பாசமும் நீங்கப்பெற்றவர்களே சிவபிரான் திருவடி யடைவார்களென்பது ' சேருஞ்சிவமானார் ஐம்மலந் தீர்ந்தவர் " என்னும் மந்திரத்தான் விளங்கும். மேற்கூறிய கருத்து :—

" மலமாயை கன்ம மாயே யந்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பிற் றங்கியித் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம் கறங்கென நிமிடத் தின்க
ணலமாரு மிறைவ னாணை யாலுயிர் நடக்கு மன்றே."

என்னும் சிவஞான சித்தியார்ச் செய்யுளிலு மமைந்துள்ளது.—

மாயேயம் அல்லது மாமாயை யென்பது மாயையின் காரியமாகிய தனு கரணங்களை — திரோதாயி யென்பது ஆன்மாக்களோடு பாகம் வருவித்தற் பொருட்டு மலத்தின் வழி நின்று மோக முதலியவற்றை தொழிற்படுத்துவ தாகிய திரோதான் சத்தியை.

இனி இறைவன் பிருதிவி முதல் நாதமீறான தத்துவங்களுக்கு அப்பாற் பட்டவனாயினும், தனது அருளால் உயிர்க்குயிராயுண்ணின்று உணர்த்துத லான் எமது தேகமாகிய கோவிலிலும் வீற்றிருந்து மலத்தைப்போக்கி முத்தி யளிப்பனென்பதை வரும் மந்திரத்தில் விளக்குகிறார்.

4 " வேயி னெழுங்கனல் போலேயிம் மேனியுங்
கோயி லிருந்து குடிகொண்ட கோனந்தி
தாயினு மும்மல மாற்றித் தயாவென்னுந்
தோயம தாயெழுஞ் சூரியனாமே "

( இ—ள். ) வேயின் எழுங்கனல் போலே இம்மேனியும் கோயிலிருந்து குடிகொண்ட கோநந்தி—மூங்கிலின் கண் நிறைந்த நெருப்பைப்போல் எமது தேகமாகிய கோவிலிலும் வீற்றிருக்கும் சிவபிரான் ; தாயினும் — தாயைவிட அதிக அன்போடு ; மும்மலம் மாற்றி—எம்மை பந்தித்திருக்கும் மும்மலங் களையும் போக்கி ; தயாவென்னுந் தோயமதா யெழுஞ் சூரியன் ஆமே— கிருபாமேகம் போல் எழுந்தருளும் ஞான ஆதித்தியனும் என்பதாம்.— ஏ—அசை.

( பொழிப்பு )-- மூங்கிலின்கண் நிறைந்த நெருப்பைப்போல் எமது தேக மாகிய கோவிலிலும் வீற்றிருக்கும் சிவபிரான் தாயைவிட அதிக அன்போடு, எம்மை பந்தித்திருக்கும் மும்மலங்களையும் போக்கும் கிருபாமேகம் போன்ற ஞான ஆதித்தியனும்

" இம்மேனியும் " என்பதில் உம்மை இறைவன் அண்டங்களையெல் லாம் கடந்து அப்புறம் நிற்பவனாயினும் ஆன்மாக்களின் தேகத்திலும் வீற்றி ருப்பான் என்பதைக்காட்டும்— ' தாயினும் " என்பதில் உம்மை உயர்வு சிறப்புப்பொருளது. தாயானவள் உணவை யூட்டிச் சேயின் உடலைப் பாது காக்சக்கூடியவளேயன்றி மலத்தைப் போக்கக்கூடியவளல்லள் --இறைவனே உயிர்களின் உடலைப் பாதுகாப்பதோடு அவற்றின் பாசத்தை யறுத்து முத்தி யளிக்கவும் வல்லவனாதலால் ' தாயினு நல்லன் சங்கரன் " என்பதுபோதரும்.

" தாயினுமினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன் "

என்னுந் தாயுமானார் திருவாக்கினும் இக்கருத்து அமைந்துள்ளது

மூங்கிலின் கண் உள்ள நெருப்பானது கடைந்தாலன்றித் தோன்றாதது போல் தேகத்தின்கண் உள்ள அருளானது அன்பாகிய கோலைநாட்டி அறிவாகிய கயிற்றினால் கடைந்தாலன்றி விளங்கித் தோன்றாது—இதை :—

" விறகிற் றீயினன் பாலிற் படு நெய்போன்
மறைய நின்றுள ன்மாமணிச் சோதியான்
உறவு கோனட்டு ணர்வு கயிற்றினான்
முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே "

என்னும் அப்பர் சுவாமிகள் திருவாக்கானும்.

" காட்டத்தி லங்கி கடையவந்தா லென்னவுன்னு
நாட்டத்தி னூடுவந்த நட்பே பராபரமே."

என்னுந் தாயுமானார் திருவாக்கானு முணர்க.

இறைவன் அன்பர்கள் தேகத்திலும் சிவலிங்கத்திலுமே தயிரில் நெய் போல் விளங்குவார்—இதுபற்றியே இந்நூலாசிரியர் :—

" உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே யுத்தமன் கோயிற்கொண் டானென்
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே."

எனவும்.

" மானிடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்
மானிடர் ஆக்கை வடிவு சிதம்பரம்
மானிடர் ஆக்கை வடிவு சதாசிவம்
மானிடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே "

எனவும்.

" அத்தன் விளையாட் டிடம் சடம் "

எனவும் ஓதி யருளினார்.

" எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய் "

என்னுந் திருவாசகமும்,

" எவ்வுயிரும் பராபரன்றன் சந்நிதி யதாகும்
இயங்கும் உடல் உயிரனைத்தும் ஈசன் கோவில் "

என்னும் திருவாக்கும் நன்கு விளக்கும்.—

இன்னும் இவ்வண்டத்தில் அறிதற்கரிய பொருள்களெல்லாம் பிண்டத்திலும் சிவலிங்கத்திலும் காணலாம். இதுபற்றியே திருவாதவூரார் புராணம் திருவம்பலச் சருக்கத்தில்.--

" எண்டரும் பூத மைந்தும் எய்திய நாடி மூன்று
மண்டல மூன்று மாகி மன்னிய புணர்ப்பி னாலே
பிண்டமு மண்ட மாகும் பிரமனோ டைவ ராகக்
கண்டவர் நின்ற வாறு மிரண்டினுங் காண லாகும்."

" ஆதலா லிந்த வண்டத் தறிவரும் பொருளா யென்றுந்
தீதிலா மூல நாடிற் றிகழ் சிவ லிங்க மேனி
மீதிலா மந்த நாத வெளியின்மே லொளிமன் றங்குக்
காதலான் மடவாள் காணக் கருத்துற நிருத்தம் செய்வோம்."

என ஓதியதென்க.

இவ்விடயங்கள் யாவும் எழாந்தந்திரத்தினுள்ளும் இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கும் படத்தினுள்ளும் அண்டபிண்ட சமத்துவ விளக்கத்துள்ளும் விளங்கும்

சிவபிரான் பிரபஞ்சத்துள்ளும் புறத்தும் நிற்கு நிலையறிந்து ஒவ்வொரு அண்டத்துக்கும் அதற்கப்பாலுஞ் சென்று ஆண்டு அவனைக்கண்டு வழிபடுதலரிதாதலால், ஆசாரியனருளால் அவனை எமது தேகத்திற்கண்டு வழிபடுதலே விசேடமென்பதை :—

" காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்து ணின்ற கருத்தறி யாரே "

என்னும் மந்திரமும்,

" உடலுக்குள் நீநின் றுலாவியதைக் காணமல்
கடல்மலைதோ றுந்திரிந்து காலலுத்தேன் பூரணமே."

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கும் நன்கு விளக்கும்.

இனி முதல்வன் ஆன்மாவின் உடலையே கோவிலாக உடையவனாயினும் குருவாயெழுந்தருளிவந்தே முத்திநெறிகளை விளக்கி உயிர்களைத் தன்னடிக்கீழ் வைப்பான் என்பதை வரும் மந்திரத்தில் விளக்குகின்றார்.

5 " சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோ
லாரியன் றோற்றமு னற்ற மலங்களே."

( இ—ள். )—சூரியகாந்தமும் சூழ்பஞ்சும்போல சூரியகாந்தம் சூழ்பஞ்சைச் சுடமாட்டா — சூரியகாந்தக் கல்லானது ( தானே ) அதைச் சூழ்ந்திருக்கும் பஞ்சைச் சுடமாட்டாது ( அதுபோல் ஆன்மாவானவன் தானே தன்னைப் பந்தித்திருக்கும் மலங்களைச் சுடமாட்டான் ) ; சூரியன் சந்நிதியில் சுடுமாறு போல் — ஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே சூரியகாந்தக்கல்லின்கணுள்ள நெருப்பு விளங்கி அதைச் சூழ்ந்திருக்கும் பஞ்சைச் சுடுவதுபோல் ; ஆரியன் தோற்றம் முன் அற்ற மலங்கள் — ஆசாரிய மூர்த்தியா யெழுந்தருளிவரும் சிவபிரான் சந்நிதி மாத்திரையான் ஆன்மாவின் கண்ணுள்ள ஞான நெருப்பு விளங்கி அவனைப் பந்தித்திருக்கும் மலத்தை நாசஞ் செய்யுமென்பதாம்.

( பொழிப்பு )—சூரியகாந்தக் கல்லானது தானே அதைச் சூழ்ந்திருக்கும் பஞ்சைச் சுடமாட்டாது. அதுபோல் ஆன்மாவானவன் தானே தன்னைப் பந்தித்திருக்கும் மலங்களைச் சுடமாட்டான். ஞாயிற்றின் சந்நிதி மாத்திரையானே சூரியகாந்தக் கல்லின்கணுள்ள நெருப்பு விளங்கி அதைச் சூழ்ந்திருக்கும் பஞ்சைச் சுடுவதுபோல் ஆசாரிய மூர்த்தியாயெழுந்தருளிவரும் சிவபிரான் சந்நிதி மாத்திரையான் ஆன்மாவின்கணுள்ள ஞான நெருப்பு விளங்கி அவனைப் பந்தித்திருக்கும் மலத்தை நாசஞ் செய்யும்.

அற்ற — அறும். துணிவு பற்றி வந்த கால வழுவமைதி. ஏ இரண்டும் அசை.

" சூரிய காந்தியொளி சூழ்ந்தபஞ்சைச் சுட்டாறபோல்
ஆரியன் றோற்றத் தருள்பெறுவ தெக்காலம்."

என்னும பத்திரகிரியார் திருவாக்கையும் இம்மந்திரத்தின் கருத்தோடு ஒப்பிட்டுக் காண்க. ஆரியன் செயலை வரும் மந்திரங்கள் விளக்குவன.

6 " மலங்களைந் தாமெண மாற்றி யருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினு ணந்தி
நலங்களைந் தானுண ணயந்தா னறிந்தே."

( இ—ள். )— தலங்கள் ஐந்தால் — ( பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேசன், இவர்களுடைய அண்டங்களுக்கு அப்பாலுள்ள ) ஐந்தாவது அண்

டத்தில் வீற்றிருந்து ( அனுக்கிரக நிமித்தமாக மாயை முதல் பிருதிவி முடிவாக நிலைபெற்றுள்ள தத்துவங்களைத் தனது ஆக்கினையினாலே பொருந்த நடத்தி சுத்த தத்துவங்களெந்தினும் சுதந்திரமாக வியாபித்திருத்தலால் ); நல்சதாசிவமான — நல்ல சதாசிவனென்னுந் திருநாமத்தையுடையவனாகிய ; புலங்களைந்தான் அப்பொதுவினுள் நந்தி — ( ஐந்தாவது அண்டத்திலிருப்பவனாயினும் ) ஐம்புலங்களினியல்பே தன்மாட்டு விளங்கும் அத்தேகமாகிய அம்பலத்தில் நடனம் செய்பவனாகிய இறைவன் ; நலங்களைந்தால் உள் நயந்தானறிந்தே — பஞ்சகலாசோதனையால் ஆன்மாக்களின் அதிதீவிர பக்குவத்தை யறிந்தே ; மலங்களைந்தாம் என மாற்றி அருளி — ( பிறவித் துன்பத்துக் கேதுவாகிய ) மலம் ஐந்து பிரகாரமாயிருக்குமென்று விளக்கி அவைகளை நாசஞ்செய்து ; குறியறிவிப்பான் -- ( முத்தியடையச் சாதனமாக ) ஒரு லக்ஷியத்தைக் காட்டுவான் என்பதாம்.—

குறியறிவிப்பான் என்பது வரும் மந்திரத்திலிருந்து வருவிக்கப்பட்டது. இம்மந்திரமும் வரும் மந்திரமும் குளகம். குறியறிவிப்பான் என்னுமிடத்திற் பொருள் முடியுமெனக் கூறினும் அமையும்.

( பொழிப்பு. ) — ஐந்தாவது அண்டத்தில் வீற்றிருந்து ( அனுக்கிரக நிமித்தமாக மாயை முதல் பிருதிவி முடிவாக நிலைபெற்றுள்ள தத்துவங்களைத் தனது ஆக்கினையினாலே பொருந்த நடத்தி சுத்த தத்துவங்களெந்தினும் சுதந்திரமாக வியாபித்திருத்தலால் ) சதாசிவனென்னுந் திருநாமத்தையுடையவனாய் ஐந்தாவது அண்டத்திலிருப்பவனாயினும் தேகமாகிய அம்பலத்திலும் நடனஞ் செய்பவனாகிய இறைவன் பஞ்சகலாசோதனையால் ஆன்மாக்களின் அதிதீவிர பக்குவத்தை யறிந்தே பிறவித்துன்பத்துக்கேதுவாகிய மலங்கள் ஐந்து பிரகாரமாயிருக்குமென்று விளக்கி அவைகளை நாசஞ்செய்து முத்தியடையச் சாதனமாக ஒரு லட்சியத்தைக் காட்டுவான்.

முதல்வன் நவபேதங்களில் சதாசிவன் அருவுருவத் திருமேனியானதாலும், பரமன் ஆகமங்களை யதிட்டித்த ஐந்தாவது முகமாகிய ஈசான முகத்தாற்றானே சதாசிவமூர்த்தியையும் அதிட்டித்துளனாதலாலும், அருவாயுயிர்க்குயிராயும் உருவத்திருமேனியுடன் குருவாயுமெழுந்தருளி வந்து அனுக்கிரகம் புரியவல்லவர் இச்சதாசிவ மூர்த்தியே யாம் — இவ்வுண்மை :—

" உருவு மருவு முருவோ டருவு
மருவு பரசிவன் மன்பல் லுயிர்க்கும்
குருவு மெனநிற்குங் கொள்கைய னாகும்
தருவென நல்குஞ் சதாசிவன் றானே."

என்னும் மந்திரத்தாற் பெறப்படுகிறது.

" அறிந்தே " என்றதின் ஏகாரம் பக்குவா பக்குவத்தை யறிந்தன்றி உப தேசம் அருளார் என்பதைக் காட்டும்.

" புலங்கள் ஐந்தான் அப்பொதுவினுள் நந்தி " என்பதும்,

" அத்தனும் ஐம்பொறி யாடகத்துண் ணின்று " என்பதும்,

ஒரே சித்தாந்தக் கருத்தை விளக்கும்.—

7 " அறிவைம் புலனுட னேநான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே யழிந்தது போலக்
குறியறி விப்பான் குருபரன் றானே."

(இ—ள்.) – நெறி அறியாது உற்ற நீர் ஆழம்போல — வழியறியாது கடற் சுழலிலகப்பட்டு மயங்கும் ஒருவனைப்போல ; அறிவு—ஆன்மா ; ஐம் புலன் உடன் நான்றது ஆகி — ஐம்புலனிற் சுழன்று மயக்கமெய்தியிருக்கும் (அவனுக்கு) ; அறிவு அறிவுள்ளே யழிந்தது போல—சிற்றறிவாகிய ஆன்ம போதம் பேரறிவாகிய இறை நிறைவிலழிந்தது போலாகும்படி ; குறியறி விப்பான் குருபரன்—முத்தியடைதற்குச் சாதனமாக ஒரு லக்ஷியத்தைக் காட் டுவோன் பரம குருவாகிய சதாசிவன் என்பதாம்.— தானே—தான் அசை ; — ஏகாரம் தேற்றம்.

(பொழிப்பு)—வழியறியாது கடற் சுழலிலகப்பட்டு மயங்கும் ஒருவனைப் போல் ஆன்மா ஐம்புலனிற் சுழன்று மயக்கமெய்தி நிற்கும். அவனுக்குச் சிற் றறிவாகிய ஆன்ம போதம் பேரறிவாகிய இறைநிறைவி லழிந்தது போலாகும் படி முத்தி யடைதற்குச் சாதனமாக பரமகுருவாகிய சதாசிவன் ஒரு லக்ஷியத் தைக் காட்டுவான்.

அருள் உணர்த்தத் தான் உணர்தலால் ஆன்மாவிற்கு அறிவு என்னும் பேருள்ளதை :—

" அறியாமை சாரி னதுவா யறிவா
நெறியான போததுவாய் நிற்கும்—குறியால்
சதசத் தருளுணர்த்தத் தானுணரா நின்ற
விதமுற் றறிவெனும்பேர் மெய்."

என்னுந் தாயுமானார் திருவாக்கினும் ;

" அறிவைம் புலனுடனே நான்றதாகி "

என்பதின் கருத்து :—

" இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமா
யந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
வந்தமிலா வானந்த மணிகொடில்லைக் கண்டேனே."

என்னுந் திருவாசகத்தினும் ;

" அறிவைறி வுள்ளே யழிந்தது போல் "

என்பதின் கருத்து :—

" சிற்றறிவு மெள்ளச் சிதைந்தெம்மான் பேரறிவை
யுற்றறியா வண்ணமறிந் தோங்குநா ளெந்நாளோ."

என்னுந் தாயுமானர் திருவாக்கினும் ;

" ஆனு வடாதே யயில்வே லரசே
ஞானு கரனே நவிலத் தருமோ
யானு கியவென் னைவிழுங் கிவெறுந்
தானய் நிலைநின் றதுதற் பரனே "

என்னும் அருணகிரிநாதர் திருவாக்கினும் அமைந்துள்ளது.

ஞானகுருவின் சந்நிதி மாத்திரையால் பொறிபுலன்களுக்கு மூலமாகிய மலகன்ம மாயைகள் நீங்குவதை மேலை மந்திரங்களிலுணர்த்திய ஆசிரியர், யோகானுட்டிப்பால் கரணவாதனை யொழியப் பெற்று பிறவித் துன்பத்தி னீங்குதலை வருமந்திரத்தில் விளக்குகிறுர்.

பரமகுருவாகிய சிவபிரான் பக்குவான்மாக்கள் ஈடேறும் பொருட்டு ஒரு உபதேச மொழியைச் சொல்லாமற் சொல்லியருள அவர்கள் யோகானுட்டிப் பை யனுட்டிப்பார்களென்பது :—

" ஆத்திரம் வந்தவர் போலலை யாம லரோகதிட
காத்திரந் தந்தென்னை யேயன்னை போலுங் கருணைவைத்திம்
மாத்திர முன்னின் றுணர்த்தினை யேமவு னவிளிநான்
சாத்திரம் சொன்ன படியிய மாதியுஞ் சாதிப்பனே."

என்னுந் தாயுமானர் திருவாக்கால் விளங்கும்.

8 " ஆமேவு பாலைப் பிரிக்கின்ற அன்னம்போற்
றாமே தனிமன்றிற் றன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமே பிறப்பெரி சேர்ந்த வித்தாமே."

( இ—ள். ) — ஆமேவு பாலைப் பிரிக்கின்ற அன்னம் போல் — நீர் கலந்த பாலை நீரினின்றும் பிரித்தெடுக்கும் அன்னப்பக்ஷியைப் போல்; தாமே — ( 7-வது மந்திரத்திற் கூறியவாறு முத்தி யடைதற்குச் சாதனமாக பரமகுருவாகிய சிவபிரானால் ஒரு லக்ஷியத்தை அருளப்பெற்ற ) ஆன்மாக்கள்; தன்னந்தனி தனிமன்றில் — ஐம்புலன்களினின்று தங்களைப்பிரித்து அறிவு மாத்திரமாய்த் தனித்து ஒப்பற்ற கனகசபையாகிய புருவ மத்தியின்கண் நாட்டத்தை வைத்து நிட்டாபரராய் ஆனந்த நித்திரை செய்யில்; நித்தம் தீமேவு பல்கரணங்கள் — சதா ( ஆன்மாக்களைத் தங்கள் வயப்படுத்தி ) தீங்கையே விளைக்கும் அந்தக்கரணங்கள்; தாமே உள் உற்றன — பிரிதுகாரணம் வேண்டாது ஆன்மாக்களின் வயமாம், ஆகவே; பிறப்பு எரி சேர்ந்த வித்தாமே — பிறவித் துன்பமானது நெருப்பைச் சார்ந்த வித்தானது எவ்வாறு நாசமடையுமோ அவ்வாறு நாசமடையுமென்பதாம்.

(பொழிப்பு) — நீர் கலந்த பாலை நீரினின்று பிரித்தெடுக்கும் அன்னப் பக்ஷியைப்போல் பரமகுருவாகிய சிவபிரானால் முத்தியடைதற்குச் சாதனமாக ஒரு லக்ஷியத்தை அருளப்பெற்ற ஆன்மாக்கள் ஐம்புலன்களினின்று தங்களைப் பிரித்து அறிவு மாத்திரமாய்த் தனித்து ஒப்பற்ற கனகசபையாகிய புருவ மத்தியின்கண் நாட்டத்தை வைத்து நிட்டாபரராய் ஆனந்த நித்திரை செய்யில், சதா ஆன்மாக்களைத் தங்கள் வயப்படுத்தித் தீங்கையே விளைக்கும் அந்தக்கரணங்கள் பிரிது காரணம் வேண்டாது ஆன்மாக்களின் வயமாம். ஆகவே பிறவித் துன்பமானது நெருப்பைச்சார்ந்த வித்தானது எவ்வாறு நாசமடையுமோ அவ்வாறு நாசமடையும்.

" தன்னந்தனி " யென்பதன் பின் " இருக்க " அல்லது " நிற்க " என்னுஞ்சொல்லை அவாய் நிலையான் வருவித்து நிட்டாபரராய் நின்று ஆனந்த நித்திரை செய்யின் என்று பொருளுரைக்கப்பட்டது.

உள் — ஆன்மா.

**இம்மந்திரத்தின் கருத்து :—**

' அன்னம் புனலைவகுத் தமிர்தத்தை யுண்பதுபோல்
என்னை வகுத்துன்னை யினிக்காண்ப தெக்காலம்."

என்னும் பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப் புலம்பலிலும் :

" தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
வனந்தனி லென்றிருப்பேன் அத்தனே கயிலாயத்தனே."

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கினும், அமைந்துள்ளது,

" என்னை வகுத்து " என்றதும் " தன்னந்தனி " யென்றதும் ஆன்மா இந்திரியங்களின் வேறாதல் காண்பதைக் குறிக்கும்.

புருவ மத்தியே பிண்டத்திற் சிதம்பர மென்பது :—

" நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
யுற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடம்
சிற்றம் பலமென்று தேறிக் கொண்டேனே."

என்னும் மந்திரத்தான் விளங்கும்—இன்னும் புருவத்திடைவெளியில் நாட்டத்தை வைத்துத் தூங்காமற் றூங்குவதை, பத்திரகிரியார்.

" நயனத்திடை வெளிபோய் நண்ணும் பரவெளியில்
சயனித் திருந்து தலைப்படுவ தெக்காலம்."

என திருவாய்மலர்ந் தருளியதாற் காண்க.

இவ்வாறு கரணவாதனை யொழிந்து நிட்டை கைகூடப்பெற்றவர்கள் கருவி காரணங்களின் சேட்டை யொழிந்து நிற்கும் நிலையை வரும் மந்திரத்தில் விளக்குகின்றார்—

9 " வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற்று
ஒத்துப் புலனுயிர் ஒன்றா யுடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யர்களே."

( இ—ள். )—வித்தைக்கெடுத்து — பிறவித் துன்பத்துக்கு வித்தாகிய புலன் காரணங்களின் சத்தியைக் கெடுத்து ; வியாக்கிரத்து — வியாக்கிர புரமாகிய புருவ மத்தியில் ; மிகச் சுத்தத் துரியம் பிறந்து — சுத்தாவத்தையிற் றுரிய நிலையெய்தி ; துடக்கற்று — பற்றற்று ; உடம்பொடு புலனுயிர் ஒன்றாய் ஒத்து — புலன்களும் உயிரும் உடம்போடு பொருந்தி நிற்பினும் ; ( அவைகளாலுபாதிக்கப்பெறாது ) ; சிவயோகியர் செத்திட்டிருப்பர் — சிவயோகியர்கள் செத்தவர்களைப் போலிருப்பார்கள் என்பதாம்.—

(பொழிப்பு)—பிறவித் துன்பத்துக்கு வித்தாகிய புலன்காரணங்களின் சத்தியைக் கெடுத்து வியாக்கிர புரமாகிய புருவ மத்தியில் சுத்தாவத்தையிற் றுரிய நிலை யெய்தி சகல பற்றுகளுமற்று புலன்களும் உயிரும் உடம்போடு பொருந்தி நிற்பினும் அவைகளால் உபாதிக்கப்பெறுது சிவயோகிகள் செத்தவர்களைப் போலிருப்பார்கள்.—

" ஒத்துப் புலனுயிர் ஒன்ரு யுடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யர்களே.'

என்பதின் கருத்து :—

" கூண்டுவிடுஞ் சீவன்மெள்ளக் கொட்டாவி கொண்டாற்போல்,
மாண்டுவிடு முன்னேநான் மாண்டிருப்ப தெக்காலம்."

" ஊனிறைந்த காயம் உயிரிழந்து போகுமுன்னம்
நானிறந்து போகவினி நாள்வருவ தெக்காலம்."

என்னும் பத்திரகிரியார் திருவாக்கால் விளங்கும்.—

காரணுவத்தை :—

1. கேவலம்.
2. சகலம்
3. சுத்தம்.

என மூவகைப்படும் — இம்மந்திரத்திற் கூறியது மூன்ருவதாகிய சுத்தாவத்தையை.

கேவலத்தினியல்பு :—

" அறிவில னமூர்த்தோ னராகாதி சேரான்
குறியொன்றி லானித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றிண்கர்த்தா வல்லோன்
கிறியன் மலவியாபி கேவலத் தானே."

என்னும் மந்திரத்தானும் ;

சகலத்தினியல்பு :—

" உருவுற்றுப் போகமே போக்கியத் துற்று
மருவுற்றுப் பூதம ஞதியான் மன்னி
வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே."

என்னும் மந்திரத்தானும் ;

சுத்தாவத்தையினியல்பு :—

" இருவினை யொத்திட வின்னருட் சத்தி
மருவிட ஞானத்தா லாதன மன்னி
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே "

என்னும் மந்திரத்தானும் விளங்கும்.

இம்மந்திரங்களின் கருத்து :—கேவலத்தில் ஆன்மா தன் இச்சா ஞானக் கிரியைகளி னிகழ்ச்சி சிறிதுமின்றி மலமே தனக்கு வடிவாய் நிற்பான்.

சகலாவத்தையில் முதல்வன் தனுகரண புவன போகங்களை யருளிய போது சுகதுக்கங்களைப் புசித்து எல்லா யோனிகளிலும் பிறந்திறந்து திரிவான்.

சுத்தாவத்தையில் இருவினை யொப்பு சத்திநிபாதம் நிகழப்பெற்று அட்டாங்க யோகத்தை யனுட்டித்து ஆணவாதி மலங்கள் நீங்கிப் பிறவாமையெய்துவான் என்பதாம்.

" ஆதனமன்னி " யெனவே இயமாதி யட்டாங்க யோகம் வருவிக்கப் பட்டது.

கேவலத்தில் அறிவின்மை முதலிய இன்மைகள் பத்துக்கும் மறு தலையாய்ச் சகலத்தில் பத்துக்காரியமும் கூறப்பெற்றுள்ளது கவனிக்கத்தக்கது.

வரும் மந்திரத்தில் மேற்கூறிய சிவயோகிகள் அனுட்டிக்கும் சிவயோகத்தினியல்பை விளக்குகிறார்.

10 " சிவயோக மாவது சித்தசித் தன்று
தவயோகத் துட்புக்குத் தன்னொளி தாயது
அவ்யோகஞ் சாராத வண்பதி யோக
நவயோக நந்தி நமக்களித் தானே."

( இ—ள். )—சிவயோகம் ஆவது—சிவயோகம் கைகூடலாகின்ற நிலையாவது ; சித்து அசித்து அன்று—அறிவாகிய நிலையும் அல்ல ; அறியாமையாகிய நிலையும் அல்ல—( அதாவது அறிவறியாமை யென்ற இரண்டு நிலையு

மல்லாத ஒரு நிலையை அடைதல்; தவயோகத்துள் புக்கு—சித்தாந்த நூல்களிலோதப்பெற்றுள்ள தவங்களில் மூன்றும் பாதமாகிய யோக பாதத்தையனுட்டித்து மனதை விடயங்களிற் செல்லவொட்டாது அகமுகமாக்கி; தன் ஒளிதாயது—ஆன்மப்பிரகாசம் சித்திப்பதாம்; அவயோகம் சாராத—(மேற்கூறிய தவயோகமல்லாத ஏனையவாகிய பலனற்ற யோகங்களுக்குச் சம்பந்தப்படாத; வல்—வலிமை பொருந்திய; நவயோகம் பதியோகம் — ஒன்பது பிரகாரமாய் நிற்கும் சிவயோகத்தை; நந்தி நமக்கு அளித்தான்—சிவபிரான் எமக்குக் கடாட்சித்தார் என்பதாம்.

(பொழிப்பு)—சிவயோகம் கைகூடலாகின்ற நிலையாவது அறிவாகிய நிலையுமல்ல அறியாமையாகிய நிலையுமல்ல அதாவது — அறிவறியாமையென்ற இரண்டு நிலையுமல்லாத ஒரு நிலையை அடைதல் (இந்நிலை) சித்தாந்த நூல்களில் ஓதப்பெற்றுள்ள தவங்களில் மூன்றும் பாதமாகிய யோக பாதத்தை யனுட்டித்து மனதை விடயங்களிற் செல்லவொட்டாது அகமுகமாக்கி ஆன்மப்பிரகாசம் சித்திப்பதாம் (மேற்கூறிய தவயோகமல்லாத) ஏனையவாகிய பலனற்ற யோகங்களுக்குச் சம்மந்தப்படாத வலிமை பொருந்திய ஒன்பது பிரகாரமாய் நிற்கும் சிவயோகத்தை சிவபிரான் எமக்கு கடாட்சித்தார்.

“சித்தசித் தன்று” என்றதின் கருத்து சித்தியாரில் :—

“அறியாமை யறிவகற்றி யறிவினுள்ளே
யறிவுதனை யருளினா லறியாதே யறிந்து
குறியாதே குறித்தந்தக் கரணங்க ளோடுங்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்
பிரியாத சிவன்றானே பிறிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெல்லாந் தானாய்த் தோன்றி
நெறியாலே யிவையெல்லா மல்ல வாகி
நின்றென்றுந் தோன்றிடுவ னிராதார னாயே.”

என்னும் செய்யுளானும்.

திருமந்திரத்தில் :—

(i) “அறிவறியாமை யிரண்டுமகற்றி”

(ii) “நிட்களமல்ல சகள நிலையல்ல”

என வோதியதானும் இனிது விளங்கும்.

நவயோகமென்றது ஞானயோகத்தையும் கிரியாயோகமாகிய அட்டாங்க யோகத்தையுமெனக் காண்க

திருக்களிற்றுப் படியாரில் :—

" ஆதார யோக நிராதார யோக மென
மீதானை தெய்தும் விதியிரண்டே—யாதாரத்
தாக்கும் பொருளாலே யாக்கும் பொருளாமொன்
றாக்காப் பொருளேயொன் றாம்."

எனக்கூறியதும்,

எமது சாந்தலிங்கசாமிகள் :—

" யோக சாதனையால் வாதனை காணமக்கொழியு மவ்வியோகமு மிருமைத்
தாகுமே கிரியை ஞானமென் பேதத்தாதனுதிய தொழில்யோகம்."

* * *

என ஓதியதும் இவ்விருவகை யோகங்களேயே.—

ஞானயோகமாவது சித்தாந்த நூல்களை யாராய்ந்து அவைகளிற் கூறப் பெற்றுள்ள முப்பொருள்களையும் நிச்சயம் பண்ணி முத்திநெறிகளை யனுட்டிக்கத் தடையாயுள்ள சகல விடயப் பற்றுக்களையும் துறந்து ஞான நிட்டை கூடி அதுவென்றும் இதுவென்றும் சுட்டி யறியும் அறிவெல்லா மிழந்து காணம் அசைவற நிற்றலாம். இஞ்ஞான யோகத்தை யனுட்டிக்க வல்லமை யில்லாதவர்கட்குக் கிரியா யோகம் அருளப்பட்டது.

கிரியா யோகம் :—

1 இயமம்.

2 நியமம்.

3 ஆதனம்.

4 பிராணயாமம்.

5 பிரத்தியாகாரம்.

6 தாரணை.

7 தியானம்.

8 சமாதி. என எண் வகைப்படும்.

இவ்விவரத்தை :—

" இயம நியமமே எண்ணிலா வாதன
நயமுறு பிராணுயாம நன்பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறு மட்டாங்க மாவது மாமே."

என்னும் மந்திரத்தாற் காண்க.

இயம இயல்பு :—

" கொல்லான் பொய்கூறன் களவிலா னெண்குணன்
நல்லான் அடக்க முடையா னடுச்செய்ய
வல்லான் பகுத்துண்பான் மாசிலான் கட்காம
மில்லா னியமத் திடையினின் றானே."

என்னு மந்திரத்தானும் ;

நியம இயல்பு :—

" தபம்செபம் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொண் மதிசொல்லீ ரைந்து
நிலம்பல செய்யி னியமத்த னாமே."

ஆசன இயல்பு ;—

'பங்கயமாதி' யெனவரும் மந்திரங்களினும் விளங்கும்.

பிராணுயாமமாவது :— உச்சுவாச நிச்சுவாசங்களி ரண்டையும் தடுத்து வாயுவைச் சுழுமுனையிற் கும்பித்து நிறுத்துதலாம். இச்சாதனையைத் தான் விதிப்படி பஞ்சாக்கரத்தை யெண்ணுதல் என்பது மென்க.

இதனை :—

" கூட மெடுத்துக் குடிபுக்க மங்கைய
ரோடுவர் மீளுவர் பன்னிரண் டங்குல
நீடுவ ரெண்விரற் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற்கோல வஞ்செழுத் தாமே."

என்னும் மந்திரத்தானுங் காண்க.

இம்மந்திரத்தின் கருத்து தேகத்தை வீடாக உடைய சூரிய சந்திர கலைகள் ஓடித் திரும்புந் தன்மையனவாய்ப் பன்னிரண்டங்குலம் வெளியே ஓடி

எட்டங்குலம் மாத்திரம் உள்ளே திரும்பும்—திரும்பாது வீண்போகும் நாலங்குலமும் கூடிக்கொளில் அதுவே பஞ்சாக்கரம் என்பதாம்.

இச்சாதனையை விதிப்படி அனுட்டிப்பது :—

“ வாமத்தி லீரெட்டு மாத்திரை பூரித்தே
ஏமுற்ற முப்பத் திரண்டு மிரேசித்துக்
காமுற்ற பிங்கலைக் கண்ணாக விவ்விரண்
டோமத்தா லெட்டெட்டுக் கும்பிக்க வுண்மையே.”

என்னும் மந்திரத்தான் விளங்கும்.

இதன் கருத்து :—இடது நாசி வழியாய்ச் சுவாசத்தை 16 மாத்திரை யுள்ளே வாங்கி 64 மாத்திரை கும்பித்து, 32 மாத்திரை வலது நாசி வழியாக வெளியே போகவிடில் உண்மை விளங்குமென்பதாம்.

நமது சுவாசத்தை 12 அங்குலமுள்ள ஒரு சத்தாய்ப் பாவித்தால்,

| | |
|---|---|
| வெளியே போவது ... ... ... | 1 |
| திரும்பி வருவது ... ... ... | 8 / 12 அல்லது ⅔ |
| 16 மாத்திரை பூரித்தால் உள்ளே வருவது ... | ⅔ × 16 = 10 ⅔ |
| 64 மாத்திரை கும்பித்தால் சேர்வது ... | 4 / 12 × 64 = 21 ⅓ |
| மொத்தம் | 32 |
| 32 மாத்திரை ரேசித்தால் வெளியே போவது | 32 |

இவ்வனுட்டிப்பால் 4 அங்குலம் வீண்போவதில்லை யென்பது விளங்கும்.

இவ்வாறு வாசி வீண் போகாமல் அதை நமது வசப்படுத்திக்கொள்ளின் சரீர சித்தி யுண்டாம் இது :—

“ வளியினை வாங்கி வயத்திலடக்கிற்
பளிங் கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம் ”

என்னும் மந்திரத்தானும், தேகம் நாசமாவதில்லை யென்பது :—

“ காற்றைப் பிடிக்குங் கணக்கறிவாளர்க்குக்
கூற்றை யுதைக்கும் குறியது வாமே.”

என்னும் மந்திரத்தானும் விளங்கும்,

வாசி—சுவாசம். இதில் " வா " என்னும் ஒரு நெடிலும், " சி " என்னும் ஒரு குறிலுமுளது — வாசிக்குப் பன்னிரண்டங்குலம் ஏற்பட்டால் "வா" என்பதற்கு எட்டங்குலமும், " சி " என்பதற்கு நாலங்குலமுமாம். " வாசி ' வெளியிற் போனால் திரும்பி வருவது " வா " மாத்திரமே, — " சி " பிரிந்து போகாவிடில் " சிவா " எனத்திரும்பும். இச்சாதனையிற் சித்தி பெற்றவர்கள் தான் " சிவ " " சிவ " என்றெண்ணத் தெரிந்தவர்கள். இவர்கள் தான் பிறப்பிறப்புகளை நீக்கிக்கொள்ள வல்லவர்கள்.

இவ்வுண்மை தான் :—

" சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளும்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்னச் சிவகதி தானே."

என்னும் மந்திரத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

' சிவசிவ வாயுவுந் தேர்ந்துள்ளடங்க " என்னும் மந்திரத்தானும் பஞ்சாக்கரத்தை விதிப்படி யெண்ணுதல் பிராணயாம மென்பது விளங்கும்.

இன்னும் " சி " என்னும் அக்கரத்தைப் பிரியவிடாத சாதனை செய்யில் ஆன்மப் பிரகாசம் விளங்கி முத்தியடைவது திண்ணம் என்பது :—

" சீயெழுத் தொன்றைச் சிந்தையிற் கருதத்
தூயநற் சுடராய்த் தோன்றுவை யென்றான்."

என்னுந் திருவாக்கானும்,

" அங்கமு மாகம வேதம தோதினும்
எங்கள் பிரானெழுத் தொன்றி லிருப்பது
சங்கை கெட்டவ்வெழுத் தொன்றையும் சாதித்தால்
அங்கரை சேர்ந்த அருங்கல மாமே "

என்னும் மந்திரத்தானும், விட்ட எழுத்தாகிய ' சி ' கரத்தை விடாதவெழுத்தாகிய ' வா ' வோடு கட்டவல்லார்களே உயிரைக் காக்க வல்லவர்களென்பது,

" விட்ட எழுத்தை விடாத எழுத்துடன்
கட்ட வல்லார் உயிர்காக்க வல்லாரே "

என்னும் மந்திரத்தானும் காண்க.

இவ்வக்ஷரத்தையே எழுத்தை யழுத்தும் எழுத்து என்பர் — எழுத்தை யழுத்துதலாவது பிரமன் எழுத்தை அழுத்திச் சிரஞ்சீவியாக்கல். இதனை :—

" படைத்தும் அழித்திடுவாய்ப் பார்க்கிற் பிரமா வெழுத்தைத்
துடைத்துச் சிரஞ்சீவியாய்த் துலங்குவிப்பாய் பூரணமே."

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கால் காண்க.

" ந ம சி வ ய " என்னும் ஐந்தக்ஷரங்களில் :—

ந — திரோதாயியையும்
ம — மலத்தையும்
சி — பதியையும்
வ — அருளையும்
ய — சீவனையும் — குறிக்கும்

இதனை :—

' சிவ னருளாய சிவன் றிருநாமஞ்
சிவ னரு ளான்மா திரோத மல மாயை "

என்னும் மந்திரத்தாற் காண்க.

" ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே " யென்றதால், குருவாயெழுந்தருளிவரும் சிவபிரான் அருட்பார்வையால் " ந ம " என்னும் அக்ஷரங்கள் சத்தி கெட்டுப்போம், போகவே எஞ்சி நிற்கும் அக்ஷரங்கள் " சி வ ய " வாம் இவ்வக்ஷரங்களைக் கொண்டே யோகானுட்டிப்பைச் சாதித்தல் வேண்டும்.

இதனை :—

" ஓதிய நம்மல மெல்லா மொழிந்திட்டவ்
வாதி தனைவிட் டிறையருட் சத்தியாற்
றீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதும் சிகாய மலமற்ற வுண்மையே "

என்னும் மந்திரத்தாற் காண்க.—ஆதிதனை விட்டு என்றது " ந ம " வாகிய அக்ஷரங்களை —

" சி வ ய " என்பது சூக்கும பஞ்சாக்ஷரம்.—இன்னும் இச்சூக்கும பஞ்சாக்ஷரத்தாற்றான் முத்திப்பேறடைதலென்பது.

"மருவுஞ் சிவாயவே மன்னு முயிரும்
அருமந்த யோகமு ஞானமு மாகும்
தெருள்வந்த சீவனர் சென்றிவற் ருலே
அருள் தங்கி யச்சிவ மாவது வீடே"

என்னும் மந்திரத்தால் விளக்கும்—

பளிங்கிற் பவளம் பதித்த வழி பளிங்கு பவளமேயாய் தோற்றுதல்போல் சிவ ஆகிய சிவமும் சத்தியும் ய ஆகிய ஆன்மாவிற் பதியில் "ய" சிவமாகவே தோன்றும், "அருள் தங்கி 'ய' சிவ மாவது வீடே என்றது இக்கருத்துப்பற்றியே.

"உடையா ளுன்ற னடுவிருக்கும்
உடையா ணடுவு ணீ யிருத்தி
அடியே னடுவு ளிருவீரு மிருப்பதானல்"

* * *

என்னும் திருவாசகச் செய்யுளும் இக்கருத்தையே விளக்கும்.

பிரான் எழுத்தென்று மேலே ஒதிய 'சி' காரமே அதிசூக்கும பஞ்சாக்கரம்.

சத்தி சிவம் முடிவில் ஒன்ரும். "சத்தி சிவமிரண்டாய்த்தான் முடிவிலொன்ருகி" என்னும் பட்டினத்தடிகள் திருவாக்காற் காண்க.

இனி பிரத்தியாகாரமாவது :— மனத்தினை விடயங்களின் வழி போகவொட்டாமற் திருப்பி உள் நோக்குதல்

இச்சாதனை சிகரத்தானமாகிய இருதயத்தில் சித்தத்தை வைத்து அதற்கு அதிபதியாகிய உருத்திரக் கடவுளை அகத்தொழின் மாத்திரையாய் விதிப்படி வழிபடல்—இதனை :—

"கண்டுகண் டுள்ளே கருத்துற வோங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழைமறை தேடியை
இன்றுகண் டிங்கே யிருக்கலு மாமே"

" நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்
தேகத்துக் கென்றும் சிதைவில்லை யாகுமே "

என்னும் மந்திரங்களாற் காண்க.

நாசிக்கதோமுகம் 12 அங்குலம் இருதயம். இருதயத்தில் உருத்திரக் கடவுளை வழிபடுதல் என்பதை :—

" உருத்திரனை யிருதயத்தி லுண்மையுடன் பாராமல்
கருத்தழிந்து நானுங் கலங்கினேன் பூரணமே "

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்காற் காண்க.

தாரணையாவது :- பிரத்தியாகாரத்தால் சகமுகமாய்ப் போகவொட்டாமல் தடுக்கப்பட்ட மனத்தினது சத்தியை அறவே நாசம் செய்தல்.

இச்சாதனையால் சித்தத்தைக் கண்டத்தில் நிறுத்தி ஆண்டு நடிக்கும் மகேசுரரை அகத்தொழில் மாத்திரையால் வழிபடுவது.—இதனை :—

" கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணுத் தண்டூடே வெளியுறத் தானோக்கிக்
காணுக் கண்கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணா ளடைக்கும் வழியது வாமே "

என்னும் மந்திரத்திற் குறிக்கப்பட்டுள்ளது.

" கோணு மனம் " என்றது — சகமுகமாய்ச் செல்லாது அகமுகமாகச் செலுத்தப் பெற்ற மனத்தை —

" கீழ்க்கட்டுதல் " ஆவது — மீளச் சகமுகமாய்ப் போக வொட்டாது அதன் சத்தி கெடச் செய்தல் —

" காணுக்கண் கேளாச் செவி " என்றிருத்தலாவது பிரபஞ்சம் இந்திரியங்களுக்குப் புலப்படுவதாயினும் மனமானது பிரபஞ்சத்திற் பொருந்தாத

காலத்து அவ்விந்திரியங்கள் சேட்டிக்கமாட்டா ; ஆகவே மனதை அசமுக மாக்கிச் சத்தி கெடச்செய்யில் கண் காண்பதுமில்லை, காது கேட்பதுமில்லை

" வீணாத் தண்டேே " என்றது கண்டத்தானத்தில் குரல்வளை வழியே மேனோக்கலைக் குறிக்கும்

இச்சாதனையிற் சித்தி பெற்றால் முதல்வன் உருவபேதமாகிய மகேசுரன் திரு நடனத்தைக் காணலாம்.

இத்தானத்தில் மகேசுரனை வழிபடுதல் என்பது :—

" விசுத்தி மகேசுரனை விழிதிறந்து பாராமல்
பசித்துருகி நெஞ்சம் பதறினேன் பூரணமே "

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கானும்,

" சிலையார் பொதுவிற் றிருநட மாடுந்
தொலையாத வானந்தச் சோதிகண் டேனே "

என்னும் இந்நூலாசிரியர் திருவாக்கானும் விளங்கும்.

' சிலை ' என்பது உருவ பேதத்தைக் குறிக்கும்.

தியானமாவது :— தாரணையால் குரல்வளை வழியே மேனோக்கி நாசி நுனியில் இருகண் பார்வையையும் வைத்து வாயுவை உள்ளே அடக்கிச் சாதனை செய்வதாம்.

" நாட்ட மிரண்டு நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமு மில்லை உணர்வில்லைத் தானில்லை
தேட்டமு மில்லைச் சிவனவ னாமே."

' நயன மிரண்டு நாசிமேல் வைத்திட்டு
உயர்விழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லைத் தானே."

என்னும் மந்திரங்களாற் காண்க.

‘ மனைக்கு மழிவில்லை ’ என்றது தேகம் நாசமாகாது என்பதாம்

சமாதி யாவது :—மேற்கூறிய பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம் ஆகிய நான்கு சாதனைகளாலும் தேகேந்திரிய வியாபாரமும் அந்தக்கரண விருத்தியும் அற்று இவைகளுக்கு மேல் தானமாகிய ஆஞ்ஞை அல்லது புருவ மத்திய பதுமத்தில் ஆன்மா அறிவு மாத்திரமாய் விந்து நாதங்களோடு பொருந்தி நிற்கும் நிலையாம். இது :—

“ விந்துவு நாதமும் மேருவி லோங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்தமி லாத அறிவி னரும்பொருள்
சுந்தரச் சோதியும் தோன்றிடுந் தானே ”

என்னும் மந்திரத்தானும்,

“ நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடம்
சிற்றம்பல மென்று தேர்ந்துகொண் டேனே ”

என்னும் மந்திரத்தானும்.

“ இடம்படு முடம்பின் மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
உடன்கிள ரொளியே யாக வொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே என்று மாடுமம் பலம தாகும் ”

என்னும் திருவாதவூரர் புராணச் செய்யுளானும் இனிது விளங்கும்.

இத்தானத்தில் சதாசிவ மூர்த்தி எழுந்தருளியிருப்பது என்பது :—

“ நெற்றி விழியுடைய நிர்மல சதாசிவத்தைப்
புத்தியுடன் பாராமற் பொறியழிந்தேன் பூரணமே ”

என்னும் பட்டினத்தடிகள் திருவாக்கானும் விளங்கும்.

" அஞ்செழுத்து மொன்ருவது " எவ்வாறென்பது பிராணயாம விவரம் கூறிய விடத்துக் காட்டப்பட்டது.

சிவபிரான் மாணிக்கவாசக சுவாமிகளுக்கு உபதேச மருளிய காலத்தில் :—

" தக்க வஞ்செழுத் தோரெழுத் துருவாம்
தன்மை கண்டருள் தரும்பெரு வெளிக்கே
புக்க ழுந்தினர் எம்முருப் பெறுவர் "

என அருளியதில்,

" அரும்பெரும் வெளிக்கே புக்கழுந்தினர் "

என்றது நாதவெளியாகிய புருவ மத்தியில் உறைத்து நின்று சமாதி எய்தின வர்கள் என்பதை விளக்கும்.

" தானவ னாகும் சமாதி கைகூடில்
ஆன மலமறு மப்பசுத் தன்மைபோம் "

என்னும் திருமந்திரமும் கூறும்.

" அவ யோகம் " என்றது யாகாதிகளை என்பது

" அந்நெறி யிந்நெறி யென்னா தட்டாங்கத்
தன்னெறி சென்று சமாதியிலே நின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே "

என்னும் மந்திரக் கூற்ருனே விளங்கும்.

யாகங்களைப் புன்னெறி யென்றது என்னையெனில் ? கூறுவாம்.—ஐத்ரேய பிராமணம் முத்தி மார்க்கங்களை உருவகப்படுத்தி, தேவதைகள் வேள்விக்காக ஒரு மனிதனைப் பலியிடவே அவனிடமாயிருந்து யாகத்திற்குப் பக்குவ மாகிய பாகம் ஒரு அசுவத்தினுட் சென்றதென்றும், அவ்வசுவத்தைப் பலியிடவே அதனிடமிருந்து வேள்விக்குரிய பாகம் ஒரு பசுவினுட் சென்றதென்

றும் பசுவைப் பலியிட அதனிடமாயிருந்த சத்து ஒரு ஆட்டினுள்ளும், ஆட்டினிடமாயிருந்து, ஒரு வெள்ளாட்டினுள்ளும் புகுந்ததென்றும். வெள்ளாட்டிலப்பாகம் நீடித்து நின்றதால் இச்செந்து யாகத்திற்கு விசேடித்ததாயிற்றென்றும் கூறும் — இயாகாதிகளின் இரகசியப் பொருளை யுணராதார் வேள்விகளின் பத அர்த்தத்தையே முடிவான பொருளெனக்கொண்டு, அசம் முதலிய தின்பதார்த்தங்களென வெண்ணிச் சீவ வதை செய்து வருகின்றனர். இச்செய்கையே புன்னெறி யெனக் கண்டிக்கப்பட்டதென்க.

இயாகத்தின்கட் கொன்ற ஜீவன் பின்னர் தேவலோகத்தை யடைவதாகக் கூறினும், கொலை யடையுங்காற் றன்பம் அடைதலானும்,

(i) " அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும் "

(ii) ' அஹிம்ஸா பரமோதர்ம "

என்னும் ஆப்த வாக்கியங்களிருத்தலானும், வேதத்திற் கூறிய யாகாதிகள் இரகசியப் பொருளையுடையன வென்பதே சித்தாந்திகளின் துணிபு. இக்கருத்தை விளக்கவே எமது திருமூல நாயனூர் :—

" அணைதுணை யந்தண ரங்கியு ளங்கி
அணைதுணை வைத்ததி னுட்பொரு ளான
இணைதுணை யாயத் தியங்கும் பொழுது
துணையணை யாயதோர் தூய்நெறி யாமே "

எனத் திருவாய் மலர்ந் தருளினர்.

" அதனுட் பொருளான யாமத் தியங்கும் பொழுது " என்றதால் அக்கினி காரியத்தின் இரகசியப்பொருள் பிராணயாமத்தாற் காணவாதனையை யொழித்தலென்பது விளங்கும்.

மனிதனைப் பலியிட்டதாகக் கூறியிருப்பது சரியை கிரியை மார்க்கங்களால் பஞ்சபூத காரியமாகிய உடம்பினையும் இந்திரியங்களையும் முதல்வனுக் கர்ப்பணம் பண்ணுதல். இதை இந் நூலாசிரியர் :—

" தானென்ற பூவை அவனடி சாத்தினால் " எனவும் ;

தாயுமான சுவாமிகள் :—

" ஈனந்தருமுடலம் என்னதுயான் என்பதற
ஆனந்தம் வேண்டி யலந்தேன் பராபரமே."

எனவும் குறித்துள்ளார்கள்.

அசுவத்தைப் பலியிட்டதென்றது தேகம் முதலியவற்றை நேதி செய்து பின்னர் வாசியாகிய அசுவத்தைப் பந்தனம்செய்து யோகமார்க்கத்தால் அந்தக் கரணங்களை நேதி செய்தலாம். அந்தக்கரணங்களாகிய பசுக்கள் சத்தி கெடினும் பயிற்சி வயத்தான் வேம்பு தின்ற புழு கரும்பின் சுவையை யனுபவித்தும் வேம்பின் சுவையை நாடுதல் போல் மனமானது நெடுங்காலம் கவலைப்பட்டுத் துள்ளித்திரியும். இதனாற்றான் துள்ளல் என்னும் பொருளுடைய வெள்ளாட்டில் யாகத்திற்குரிய பாகம் நீடித்திருந்ததாகக் கூறப்பட்டுளது இத்துள்ளலாகிய மனத்தை முதல்வனுக் கர்ப்பணஞ் செய்வதை யெமது தாயுமான சுவாமிகள் :—

" துள்ளு மறியா மனது பலி கொடுத்தேன் "

என விளக்கி யிருக்கின்றனர்.— இவ்வசமேகத்தின் இரகசியப்பொருள் அடியில் வரும் மந்திரத்தானும் இனிது விளங்கும் :—

" நெய்நின் றெரியு நெடுஞ்சுட ரேசென்று
மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
மைநின் றவிழ்தரு மத்தின மாமென்றுஞ்
செய்நின்ற செல்வ மதியது வாமே."

இம்மந்திரத்தின் பொருள் :— யோகாப்பியாசத்தால் விந்துத் தானத்தினின்று அமிழ்தமாகிய நெய் பொழிய எரியும் நெடிய சுடராகிய மூலாக்கினியின் வழியே ஆன்மாவானவன் ஆஞ்ஞைத் தானத்தை யடைந்து மையாகிய வெள்ளாடு யாகத்திற் றகனிக்கப்படுவதின் இரகசியப் பொருளாகிய மனம் நாசமாகும் விதத்தை யுணர்ந்தவர்கட்கு அஞ்ஞான இருணீங்கும், நீங்கவே, மோன நிலையுண்டாம், என்றும் நீங்காச் செவ்விய பொருளாகிய சிவஞானச் செல்வத்தையும் ஆன்மாவானவன் அடைவனென்பதாம்.

மேலை மந்திரத்தில் அருளிய யோகானுட்டிப்பின் பயனை வரும் மந்திரத்திற் கூறுகின்றார் :—

11 " அளித்தா னுலகெங்குந் தானான வுண்மை
அளித்தா னமரா ரறியா வுலகம்
அளித்தான் றிருமன் றுளாடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே."

( இ—ள். )—உலகெங்குந்தானான உண்மை – தான் எவ்விடத்தும் நீக்கமின்றி நிற்கும் உண்மையையும் ; அமரர் அறியா வுலகம்—வானோரும் அறியாத சிவலோகத்தையும் ; திருமன்றுள் ஆடும் திரு தாள் — கனக சபையின் கண் நடிக்கும் சீபாதத்தையும் ; பேரின்பத்து அருள் வெளி — பேரின்பத்தை யளிக்கும் சிதாகாயத்தையும் ; அளித்தான் — ( சிவபிரான் ) கடாட்சித்தார் என்பதாம்.

( பொழிப்பு. ) — தான் எவ்விடத்தும் நீக்கமின்றி நிற்கும் உண்மையையும், வானோரும் அறியாத சிவலோகத்தையும், கனக சபையின் கண் நடிக்கும் சீபாதத்தையும், பேரின்பத்தை யளிக்கும் சிதாகாயத்தையும் சிவபிரான் கடாட்சித்தார்.

தேவர்கள் வேள்வி முதலிய பசு புண்ணியங்களை மாத்திரம் செய்வதானும், அவைகளின் பயனெல்லாம் அழிவெய்துவனவாகிலும், சிவலோகம் அழிவின்றி நிலைபேறுடைத்தாதலானும், அதனை " அமரறியாவுலக " மென்றார். யோக சாதனையிற் சித்தி பெற்றோர்க்கே " உலகெங்கும் தானான உண்மை " விளங்கும்.

" பெத்தர்க் கொருசிவ மின்மையிற் பேரருள்
முத்தர்க் குலகுமின் றுந்தீ பற
முழுதுஞ் சிவமாத லுந்தீ பற "

என்னுந் திருவாக்காற் காண்க,

இவ்வாறு அளிக்கப்பெற்றோர்களுடையும் தன்மையை வரும் மந்திரங்களாற் கூறுகின்றார் :—

12 " வெளியின் வெளிபோய் விரவிய வாறும்
அளியி னளிபோ யடங்கிய வாறும்
ஒளியி னொளிபோ யொடுங்கிய வாறுந்
தெளியு மவரே சிவசித்தர் தாமே "

(இ—ள்.)—வெளியின் வெளிபோய் விரவிய வாறும் — மனவெளியில் பரவெளி கலந்த விதத்தையும்; அளியின் அளிபோய் அடங்கிய வாறும் — ஆன்மாக்களின் அன்பில் சிவபிரான் அன்பானது அடங்கிய விதத்தையும்; ஒளியின் ஒளிபோய் ஒடுங்கிய வாறும் — ஆன்மப் பிரகாசத்தில் அருட் பிரகாசம் போய்க் கலந்த விதத்தையும்; தெளியு மவரே சிவசித்தர் தாமே — அறிந்தவர்களே சிவசித்தர்களாம், என்பதாம்.

(பொழிப்பு)—மனவெளியிற் பரவெளியும், ஆன்மாக்களின் அன்பில் சிவபிரான் அன்பும், ஆன்மப்பிரகாசத்தில அருட் பிரகாசமும் போய்க் கலந்த விதத்தையும் அறிந்தவர்களே சிவசித்தர்களாம்.

இம்மந்திரத்தின் கருத்தை யொட்டியே பத்திரகிரியார் :—

“ மன்னும் பரவெளியை மனவெளியி லடைத்தறிவே
யென்னு மொருநினைவை யெழுப்பிநிற்ப தெக்காலம் ”

எனவும்,

“ ஒளியி லொளியா முருப்பிறந்த வாறதுபோல்
வெளியில் வெளியான விதமறிவ தெக்காலம் ”

எனவும்;

தாயுமானசுவாமிகள் :—

“ வெளியி னின்ற வெளியாய் விளங்கிய
ஒளியி னின்ற வொளியாமுன் றன்னைநான்
தெளிவு தந்தகல் லாலடித் தேவென்று
களிபொ ருந்தவன் றேகற்ற கல்வியே ”

எனவும் திருவாய்மலர்ந் தருளியது.

“ அளியி னளிபோ யடங்ய வாறும் ”

என்றதின் கருத்து :—

“ அன்பினுள் ளாகி யமரும் அரும்பொருள் ”

என்னும் மந்திரத்தினும்,

“ பத்திவலையிற் படுவோன் ” என்னுந் திருவாக்கினும் அமைந்துள்ளது.

இம்மந்திரத்திற் குறித்த சிவசித்தரின் திறத்தை வரும் மந்திரத்தினும் விளக்குகிறார்.

13 " சித்தர் சிவலோக மிங்கே தெரிசித்தோர்
சத்தமும் சத்த முடிவுந்தம் முட்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே "

(இ—ள்,)—சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்— சிவசித்தர்கள் சிவலோகத்தை இப்பூமியின் கண்ணே தெரிசித்தவர்கள்; சத்தமும் சத்தமுடிவும்—நாத நாதாந்தங்களையும்; தம் உள் கொண்டோர் — தம்முள் உணர்ந்தவர்கள்; நித்தர்—பிறப்பு இறப்பு அற்றோர்; நிமலர் நிராமயர் — மலம் நோயற்றவர்கள்; நீள்பர முத்தர் — மேம்பாடுடைய பர முத்தி யடைந்தவர்கள்; முத்தி முதல் முப்பத்தாறே — அவர்கள் முத்தியடைந்த நிலை முப்பத்தாறு தத்துவங்களையும் சோபானமாகக்கொண்டு கடந்து சென்று அவைகளுக்கப்பாற்பட்ட சிவத்தை யடைந்ததாகும்.

(பொழிப்பு)—சிவசித்தர்கள் சிவலோகத்தை இப்பூமியின் கண்ணே தெரிசித்தவர்கள்; நாதநாதாந்தங்களையும் தம்முள் உணர்ந்தவர்கள்; பிறப்பு, இறப்பு, மலம், நோய் அற்றவர்கள்; மேம்பாடுடைய பரமுத்தியடைந்தவர்கள்; அவர்கள் முத்தியடைந்த நிலை முப்பத்தாறு தத்துவங்களையும் சோபானமாகக் கொண்டு கடந்து சென்று அவைகளுக்கப்பாற்பட்ட சிவத்தை யடைந்ததாகும்.

" நாதாந்தங்கண்டோர் நடுக்கற்ற யோகியர் " என்னும் மந்திரத்தால், " சத்த முடிவுந் தம்முட்கொண்டோர் " என்றது சிவயோக சித்தர்களையே யென்பது காண்க.

36 தத்துவங்களாவன :—

சிவ தத்துவம்—5 :— சிவம், சத்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை.

வித்தியா தத்துவம்—7 :— மாயை, கலை, காலம், நியதி, வித்தை, இராகம், புருடன்,

ஆன்ம தத்துவம்—24

36

- அந்தக்கரணம்—4 :— மனம், புத்தி, ஆங்காரம், சித்தம்.
- கன்மேந்திரியம்—5 :— வாய், கால், கை அபானம், குறி.
- ஞானேந்திரியம்—5 : செவி, உடம்பு, கண், நாக்கு, மூக்கு.
- தன்மாத்திரை 5 :— சத்தம், பரிசம், ரூபம், இரசம், கந்தம்.
- பூதம்—5 :— பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்

சிவ தத்துவம், வித்தியா தத்துவங்களை :—

" தேசு திகழ்சிவம் சத்தி சதாசிவம்
ஈச னல்வித்தை யிராகங் கலைகாலம்
மாசகல் வித்தை நியதி மகாமாயை
ஆசில் புருடாதி யானவீ ரூறே "

எனவும்,

அந்தக்கரணங்களை :—

" அந்தக்கரண மொருநான்கு ", எனவும்,

ஞானேந்திரியம், கன்மேந்திரியங்களை :—

" இந்தியமீரைந்து " எனவும்,

தன்மாத்திரையை :—

" சத்தமுதலைந்தும் " எனவும்,

பூதங்களை :—

" பாரது பொன்மை பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காற்று மாருதங் கறுப்பை யுடையது
வானகந் தூம மறைந்துநின் றூரே "

எனவும், இந்நூலாசிரியர் கூறியுள்ளார்.

மேற்கூறிய தத்துவங்களை ஆன்மாக்களுக்கு முதல்வன் அருளியது, பிறப்பிறப்பைப் போக்கி முத்தி பயப்பிக்கக் கருவியாகவே யென்பது :—

‘ சத்தி யிராகத்திற் றூனல் லுயிராகி
ஒத்துரு பாச மலமைந்தோ டாறுறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தன னீசன் மயமறு மாறே ”

என்னும் மந்திரத்தான் விளங்கும்.

தத்துவங்களாகிய சோபானத்தை ஏறிக்கடந்து அப்பாற்பட்ட சிவத்தை ஆத்மாக்கள் அடைவதே முத்தி நிலை என்பது :—

“ பேணுதத்து வங்களென்னும் பெருகுசோபான மேறி
ஆணையாஞ் சிவத்தைச்சார அணைபவர் போல ”

என்னும் ஸ்ரீ சேக்கிழார் திருவாக்கானும் காண்க

தங்களுக்காகவேண்டிய தொழிலைச் செய்து முடித்தற்கு பிறரிடமிருந்து கருவி யிரவல் பெற்றவர்கள் அக்கருவியையிரவற்கொடுத்தோர் வாங்கிக் கொள்ளுமுன்னர் தாங்கள் கருதிய தொழிலைச் சீக்கிரத்திற்செய்து முடிப்பது போல், யோகிகள் தங்களுக்குரிய தவங்களைச் செய்தற்குக் கருவியாக சிவபிரானிடமிருந்து பெற்ற 36 தத்துவப்படிகளைக் கொண்டு வீண் காலம் போக்காமல் அதிசீக்கிரத்தில் முத்தி நெறிகளை யனுட்டித்து அப்படிகளுக்கப்பாலுள்ள சிவபிரான் திருவடியை அடைவார்கள்.

“ முத்தர்தம் முத்திமுதல் முப்பத்தாறே ” என்றதானும், “ ஆகின்ற ஆறாறுருஞ்சைவர் தத்துவம் ” என்னும் மந்திரத்தானும் ‘ சித்தர் ”, “ முத்தர் ”, “ சிவயோகியர் ” என்னும் சொற்களெல்லாம் சைவரையே குறிப்பதென்பது விளங்கும்.

தத்துவம் முப்பத்தாறையுங் கடந்த நிலையின் தன்மையை வற்புறுத்தி வருமந்திரங்களாற் கூறுகின்றார் :—

14 “ முப்பது மாறும் படிமுத்தி யேணியாய்
ஒப்பிலா வானந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப வரிய சிவங்கண்டு தான்றெளிந்
தப்பரி சாக வமர்ந்திருந் தாரே.”

(இ—ள்.)—மூப்பது ஆறும்—முப்பத்தாறு தத்துவங்களையும்; முத்தி ஏணிப்படியாய் — முத்திக்கு ஏறச்சோபானமாயுள்ள படிகளாகக் கொண்டு அவைகளின் வழி சென்று; ஒப்பு இலா—உவமையற்ற; ஆனந்தத்து உள் ஒளிபுக்கு—பேரானந்தமாகிய சோதியிற் கலந்து; செப்ப அரிய சிவம் கண்டு — வாக்குக்கு எட்டாத சிவத்தைத் தெரிசித்து; தான் தெளிந்து—தம்மியல்பையுமுணர்ந்து; அப்பரிசாக அமர்ந்திருந்தார்—சிவ வியாபகத்துள் அடங்கி சிவமேயாய் செயலற்றிருந்தார்கள் (சிவசித்தர்கள்) என்பதாம். இருந்தார்—இருப்பார்கள்—துணிவுபற்றி வந்தகால வழுவமைதி.

(பொழிப்பு.)—முப்பத்தாறு தத்துவங்களையும் முத்திக்கு ஏற சோபானமாயுள்ள படிகளாகக் கொண்டு அவைகளின் வழி சென்று அவைகளுக்கப் பாலுள்ள உவமையற்ற பேரானந்தமாகிய சோதியிற் கலந்து வாக்குக்கெட்டாத சிவபிரானைத் தெரிசித்து, தம்மியல்பையுமுணர்ந்து சிவவியாபகத்துள் அடங்கி சிவமேயாய் செயலற்றிருந்தார்கள் சிவ சித்தர்கள்.

ஆனந்தத்து உள் ஒளிபுக்கு என்றது பரநாத வெளியின்மேல் ஒளியாயிருக்கின்ற கனகசபையை —

* * *

"மீதிலா மந்நாத வெளியின் மேலொளிமன் றங்குக்
காதலான் மடவாள்காணக் கருத்துற நிருத்தஞ் செய்வோம்"

என்னும் திருவாக்கார் காண்க.

15 "இருந்தார் சிவமாகி யெங்குந் தாமாகி
இருந்தார் சிவன்செய லியாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்
கிருந்தா ரிழவுவந் தெய்திய சோம்பே."

(இ—ள்.)—(மேலை மந்திரங்களிற் கூறிய சிவசித்தர்கள்) சிவம் ஆகி—சிவத்தன்மை யெய்தியும்; எங்கும் தாமாகி — எங்கும் தாங்கள் வியாபகமாகியும்; சிவன் செயல் யாவையும் நோக்கி—(தம் செயலற்று) சிவன் செயலால் யாவற்றையுங் கண்டும்; முக்காலத்து இயல்பைக் குறித்து - முக்காலத்து இயல்பையுமுணர்ந்து! இழவு வந்து—ஆன்ம போதமானது இறந்து; எய்திய—(அதனால்) அடைந்த; சோம்பு இருந்தார் - (அந்தக்கரண புறக்கரண வியாபாரங்களற்ற) சோம்பலை அடைந்திருந்தார்கள் என்பதாம்.

( பொழிப்பு. )—மேலே மந்திரத்திற் கூறிய சிவசித்தர்கள், சிவத்தன்மை யெய்தியும், எங்கும் தாம் வியாபகமாகியும், தம் செயலற்று சிவன் செயலாலியாவற்றையும் கண்டும், முக்காலத்து இயல்பையு முணர்ந்தும், ஆன்ம போதமானது இறந்து அதனால் அடைந்த ( அந்தக்கரண புறக்கரண வியாபாரங்களற்ற ) சோம்பலை அடைந்திருந்தார்கள் என்பதாம்.

இம்மந்திரத்தின் கருத்து பளிங்கிற் பவளம் பதிந்தால் பளிங்கானது எவ்வாறு தானென வேறு காணப்படாது பவளமே யாம்படி நிற்குமோ, அவ்வாறு மாசு நீங்கப்பெற்று அருளொளி வியாபகத்துளடங்கிய சிவசித்தர்கள் சிவ வியாபகத்தோடு எங்கும் வியாபித்தும், ஆன்ம போதம் போகவே, யாவற்றையும் ஆதித்தியன் ஒளியாற்காணும் கண்ணைப்போல சிவன் செயலாற் கண்டும் நிட்டையில் அசைவற நிற்பார்கள் என்பதாம்.

"இருந்தார் முக்காலத்தியல்பைக் குறித்து" என்றதின் கருத்து :—

'உணராதே யாது முறங்காதே யுன்னிப்
புணராதே நீ பொதுவே நிற்கி—லுணர்வரிய
காலங்கள் செல்லாத காலத் துடனிருத்திக்
காலங்கள் மூன்றினையுங் கண்டு"

என்னுந் திருக்களிற்றுப்படியார்ச் செய்யுளினமைந்துள்ளது.

இம்மந்திரத்திற் கூறிய சோமபலை யெய்திய சிவயோகிகளின் நிலையை வரும் மந்திரத்திற் கூறுகின்றார்.

16 "சோம்ப ரிருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பது சுத்த வொளியிலே
சோம்ப ருணர்வு சுருதி முடிந்திடம்
சோம்பர் கண்டாரச் சுருதிக்கட் டேக்கமே."

( இ—ள். )—சோம்ப ரிருப்பது சுத்த வெளியிலே — மேலை மந்திரத்திலோதப்பெற்ற சோம்பல் நிலை யெய்திய யோகிகள் — இருப்பது நாதவெளியில் ; சோம்பர் கிடப்பது சுத்த ஒளியிலே — அவர்கள் நிலை பெற்றிருப்பது ஒளியாயிருக்கின்ற கனக சபையின் கண்ணே ; சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடம் —அவர்கள் அறிவு இருப்பது சுருதிகட் கப்பாற்பட்ட இடத்தில் ; சோம்பர் கண்டார் அ சுருதிக்கண் தூக்கமே — அவர்கள் சுருதிகளை யோதி அவைகளிற் கண்டது ஆனந்த நித்திரை யெய்துவதையே.

(பொழிப்பு.) — மேலே மந்திரத்திலோதப் பெற்ற சோம்பல் நிலை யெய்திய சிவயோகிகள் இருப்பது பராகாத வெளியில். அவர்கள் நிலை பெற்றிருப்பது ஒளியாயிருக்கின்ற கனக சபையின் கண்ணே அவர்கள் அறிவிருப்பது சுருதிசட்கப்பாற்பட்ட இடத்தில் அவர்கள் சுருதிகளையோதி யுணர்ந்தது ஆனந்த நித்திரை யெய்துவதையே.

நிட்டையிலமர்ந்திருத்தலை "சும்மா இருத்தல்" எனவும் சுருதிகள் கூறா நிற்கும் — இந்நிலையே தூங்காமற் றூங்குவதாகிய ஆனந்த நித்திரையைப் பயப்பிக்கும் :—

" சும்மா விருக்கச் சுகஞ்சுக மென்று சுருதியெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டு மறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பியென் பேதமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேனந் தோவென் விதிவசமே."

என்னுந் தாயுமானுர் திருவாக்காற் காண்க.

வெம்மாயக் காட்டி லலைந்தேன் என்றது இந்திரிய வழிச்செல்லலால் விளையும் இன்னல்களை யுணராது, அவற்றின் நெறிப்பட்டு அவற்றினியல்பு தன்மாட்டு விளங்க நின்று அங்குமிங்கும் அலைந்து வாழ்நாளை வீணாக்கினதைக் குறிக்கும். தூங்காமற் றூங்குவதாகிய யோக நித்திரையாற் பெறும் பயனை வரும் மந்திரத்திற் கூறுகின்றார்.

17 " தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே."

(இ—ள்.) — தம் உள்ளே — தங்கள் உள்ளத்தே ; சிவலோகமும், சிவயோகமும், சிவபோகமும் — சிவலோகத்தையும், சிவத்தோடு அத்துவிதமாய்ப் பொருந்தி நிற்பதாகிய யோக நிலையையும் (இவ்வாறு பொருந்தி நிற்றலால் அனுபவிக்கும்) சிவபோகமாகிய பேரின்பத்தையும் ; தூங்கிக்கண்டார்— தூங்காமற் றூங்குவதாகிய ஆனந்த நித்திரையிற் கண்டார்கள் ; தூங்கிக்கண்டார் நிலை சொல்வதெவ்வாறே— இவர்கள் எய்திய நிலையானது (மனவாக்குக் கெட்டாததலான்) எவ்வாறு சொல்வதென்பதாம்

சுத்தா வத்தையிற் றுரியநிலை யெய்தி நிட்டையி லமர்ந்திருத்தலே தூங்காமற் றூங்குவதென்பதும், சகலாவத்தையிற் றூங்கி விழித்தலால் யாதொரு பயனுமில்லை யென்பதும் :—

(i) " கட்டறுக்க வொண்ணு கருவிகர ணுதியெல்லாம்
சுட்டறுத்து நிட்டையிலே தூங்குவது மெக்காலம் "

(ii) " தூங்கிவிழித் தென்னபலன் றூங்காமற் றூங்கிநிற்கும்
பாங்குகண்டா லன்றோ பலன்காண்பேன் பைங்கிளியே "

என்னுந் தாயுமானுர் திருவாக்கால் இனிது விளங்கும்.

இதுகாறுங் கூறியவாற்ருல் ஞானச்சோம்பர்கட்கும், ஊனச்சோம்பர்கட்கும் உள்ள வேற்றுமை சாலப் பெரிதென்பது புலப்படும்.

தூங்காமற்றூங்கும் சுகாதீத அனுபவிகள் திருவருள் விலாஸப்பெருக்கை முற்ற வுணர்ந்து அவ்வுணர்ச்சியைப் புறக்கரணங்களால் வெளியிட இயலாது,

" சொல்லுவ தறியேன் வாழி
தோற்றிய தோற்றம் போற்றி "

என்னும் நிலையிலுள்ளோ ராவர் — அவர் அறிவின் பரப்பையும், ஆனந்தப் பெருக்கையும் அளவிடவல்லா ரியாவர்? திருவருணெறியிற் றவருது நிற்றல் தானும் வேலைகட்கெல்லாம் அரியவேலையன்றே — இத்தகைய பெரியாரைச் "சோம்பர்" என்று சிலர் இந்நாளில் இழித்துக்கூறுவது அறியாமையேயாகும். அது :—மன்னுயிர்க்கிதம் செய்தலென்னும் சீரிய அறத்தை மேற்கொண்டு பெத்த நிலையினின்று புண்ணியஞ் செய்வோர் வாக்காலும், கரணத்தாலும், பொருளாலும், பிறர்நலம் குறித்துப் பாடுபடுதல் போல் ஞானிகள் உலோபகாரமாக உழைப்பதில்லை என்னுமோர் கருத்தேயாம். அது ஆராய்சிக்குறைவால் எழுங்கூற்றெனலாம் — இவ்வாறு இழித்துக்கூறுபவர். சிவபெருமான் சனகாதி பெருந்தவத்தினர்க்கு, உண்மைப் பொருள்களைப் போதித்தருளியது, பிரசங்கத்தாலும் பொருளுதவியினுலுமல்ல வென்பதை யறியார் போலும். இஞ்ஞானச் சோம்பர்கள் ' கோமான் பணிடைத் தொண்டரொடும் அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு போமாறு " அமைந்தவர்கள். " இமையளவு முபகாரமல்லால் வேறொன்றியக்கா " நற்குணக்கடலாயிருந்த ஒன்ருகிய இறைவனது " குறிப்பே குறிக்கொண்டு " நிற்குமிச்சோம்பர்கள் உபகாரிகளாகாது ஒழிவது யாங்ஙனம்? ஆனுல் அவர்கள் உபகரிக்கும் வழிகளிற் பல நமக்குத் தெரியாதிருக்கலாம். திரிகரண சுத்தராய்த் தெய்வ நிச்சய புத்தியோடு வாழுமொருவன் பிரசங்கஞ் செய்யாவிடினும், பொருள் தராவிடினும், தன் வாழ்க்கைத் தூய்மையினுலேயே பலர்க்கும் பரம உபகாரியாகின்ருன். — திருமூலர், தாயுமானுர், பட்டினத்தார் முதலியோர் இச்சோம்பர்கள்

கூட்டத்திற் சேர்ந்தவரன்றோ? இவர்கள் மன்பதைகள் உய்யுமாறு ஈடு மெடுப்புமற்ற உபகாரத்தைத் தம் நூல்கள் வாயிலாகச் செய்தாரன்றோ? இங்ஙனமுமன்றி இறைவன் உயிர்கட்கு அருளுங்கால் நாமறியாவண்ணம் வேறு பல துறைகளில் இச்சோமபர்கள் இறைவனுள்ளுறை வழி நின்று பல உலகங்களில் பல சமயங்களில் உதவுதல்கூடும். சைவ சித்தாந்தம் மேலான ஆன்மாக்களைப் பாகுபடுத்தி அவர்கட்கு அலுவல்கள் விதித்திருப்பதை நோக்கின் இவ்வுண்மை தெற்றெனப் புலப்படும்.

இன்னும் ஒரு உண்மை கூறி இதனை முடிப்பாம் — ஞானச் சோம்பன் ஒருவன் யாதாமொரு ஒதுக்கிடத்திருந்து உலக நன்மை கருதி ஓரெண்ணங்கொள்வானாயின் அதனால் விளையும் பயன் ஆயிரமாயிரம் பிரசங்கங்களாலும் சங்கங்களாலும் விளைவதரிதாம்— ஆதலின் ஞானச்சோம்பர்க்கும் ஊனச் சோம்பர்க்கும் வேற்றுமை பெரிதென்க —

இந்நிலையை அருளுவது சிவபிரானே யென்பதை வரும் மந்திரத்தினால் வற்புறுத்துகிறார்.

18 " எவ்வாறு காண்பா னறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வா னாதியன் றானும்
ஒவ்வாத மன்றுளுமை காண வாடும்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம் "

(இ—ள்.)—அறிவு தனக்கு எல்லை எவ்வாறு காண்பான் — தன் அறிவுக்கெட்டியபடி இறைவனை எந்தெந்த விதமாக எண்ணி ஒருவன் வணங்குகின்றானோ; அவ்வாறு அருள்செய்வான் ஆதியன் தானும் — அந்தந்த விதமாய் நின்று பயனையளிப்பவன் ஆதி பகவனே; (அவன்றான்) ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடும் — உவமையற்ற கனகசபையின் கண்ணே உமாதேவிகாண திருநடனஞ் செய்யும்; செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம் – செவ்விய சிதாகாயத்தில் செழிப்பாய்ப் பிரகாசிக்கும் மாணிக்க மணியாம்

(பொழிப்பு)—தன் அறிவுக்கு எட்டியபடி இறைவனை எந்தெந்த விதமாக எண்ணி ஒருவன் வணங்குகின்றானோ, அந்தந்த விதமாய் நின்று பயனையளிப்பவன் ஆதி பகவனே — அவன்றான் உவமையற்ற கனகசபையின் கண்ணே உமாதேவிகாண நடனஞ்செய்யும் சிதாகாயத்தில் செழிப்பாய்ப் பிரகாசிக்கும் மாணிக்க மணியாம்.

பிரமன் முதலிய தேவர்கள் அனைவோரும் சிவபிரான் ஏவல்வழி நின்று தங்கள் கிருத்தியங்களைச் செய்வதால் அவர்களை வழிபடுவதற்கேற்ற பயனை அளிப்பவன் சிவபிரானே யாவன்—சிவபிரான் என்பதை வலியுறுத்தவே, "செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர் மாணிக்கம்" என வோதியது —

இன்னும் பூதவிருளைக் கெடுப்பது ஆதித்தியன் ஒளியாதலானும் அஞ்ஞானவிருள்கெட முதல்வனைச் செஞ்சுடராகவே பாவித்தல் வேண்டுமென்பது சகல சமயிகளின் றுணிபேயாம் — இதுபற்றியே

"செம்பொன் மேனிச் செஞ்சுடரே" எனவும்,

"மூவுருவம் கண்டபோ தொன்றும் சோதி" எனவும்,

"செம்பொருள் காண்பதறிவு" எனவும்,

ஆன்றோர் திருவாய்மலர்ந் தருளியது — "செம்மை" என்னும் பண்படியி னின்று "சிவப்பு" என்பது தோன்றியதுபோல் "சிவம்" என்பதுந்தோன்றியதென்பதே சித்தாந்திகளின் றுணிபு — "சிவ" என்பதின் இரகசியப் பொருளை 10-வது மந்திரத்தின் கீழ் விளக்கப்பட்டிருக்கிறது.

இதுவேயுமன்றி காயத்ரி யென்பது தன்னை ஜபிப்பவர்களை இரக்ஷிப்பதாகிய ஒரு தேவதையெனவும், அத்தேவதையானது ஒரு உன்னதமாகிய சிகரத்திலிருப்பதாகவும் அதை வா வென்றழைத்து உபாசித்த பின்னர் மறுபடியும் முன்னிருந்த தானத்திற்குப் போகும்படி யனுமதி கொடுப்பதாகவும் கூறுவது.

பிரமாணம் — "உத்தமே சிகரே தேவி
பூம்யாம் பர்வத மூர்த்தனி
ப்ராமணேப்யோ ஹ்யநுஜ் ஞானம்
கச்ச தேவியதா சுகம்"

சிகரத்திலுள்ள தேவதையை வா வென்றழைப்பதும் விதிப்படி சிவா என எண்ணுவதும் ஒரே இரகசியப் பொருளை விளக்கும்.

இதுகாறுங் கூறியவாற்றால் இறைவனுக்குச் சிவனென்னும் பெயர் சர்வ மத சம்மதமான பெயர் என்பது காண்க.

" எவ்வாறு காண்பான் " " அவ்வாறருட் செய்வான் " என்பதின் கருத்து :—

" வாது செய்து மயங்கு மனத்தராய்
ஏது சொல்லுவி ராகிலு மேழைகாள்
யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலாம்
மாதே வன்னலாற் றேவர்மற் றில்லையே "

என்னும் அப்பர்சுவாமிகள் திருவாக்கினும் ;

' யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர் "

* * *

என்னும் சிவஞான சித்தியார்ச் செய்யுளினும் ;

" எவரெவர்க ளெப்படிகண் டெந்தப் படிநினைத்தார்
அவரவர்க் கப்படிநின் றானென்ப தெக்காலம் "

என்னும் பத்திரகிரியார் திருவாக்கினும், அமைந்துள்ளது.

சிவபிரான் அருளும் அருளின் பெருமையை வரும் மந்திரத்தால் விளக்குகிறார் :—

19 " மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்று ளாடுந் திருக்கூத்தை
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே."

( இ—ள். )—மாணிக்கத்துள்ளே மரகதசோதியாய் மரகதமாடமாய்—மாணிக்கமணியுள் மரகதமணியின் சோதியாயும் மரகத மாடமாயும் விளங்கும் ; ஆணிபொன் மன்றுள் ஆடும் திரு கூத்தை—உயர்ந்த கனகசபையின்கண் நடிக்கும் திரு நடனத்தை ; பேணி தொழுது என்ன பேறு பெற்றார்—அன்போடு வழிபடுபவர்கள் பெறும் பேற்றை என்னென்று சொல்வது ? மிகுந்த சிறப்புடைத்து என்றபடி.

( பொழிப்பு. )—மாணிக்கமணியுள் மரகத ஜோதியாயும் மரகத மாடமாயும் விளங்கும் உயர்ந்த கனகசபையின்கண் நடிக்குந் திரு நடனத்தை அன்

போடு வழிபடுபவர்கள் பெறும் பேற்றை என்னென்று சொல்வது ? மிகுந்த சிறப்புடைத்து என்பதாம்.

ஏனைத்தேவர்கள்மாட்டுச் செய்யும் வழிபாடுகளையும் தானே ஏற்றுக் கொண்டு அனுக்கிரகம் செய்பவன் சிவபிரானேயெனின் அவனையே வழிபடு பவர்கள் பெறும் ஆனந்தக்களிப்பானது மனவாக்குக்கெட்டாதது என்பார் " என்ன பேறு பெற்றாரே " என வியந்தோதி யருளினர்— இக்கருத்து :—

' பெற்ற பேற்றை யேதென்று சொல்வேன் "

என்னுந் தாயுமானர் திருவாக்கினும் அமைந்துள்ளது.

மாணிக்கமணி செக்கர் வானிறத்தோனாகிய சிவபிரானைக் குறிப்பதாக முன்னரே கூறப்பெற்றுள்ளது — மரகதம் அவனை விட்டு நீங்காத இச்சா சத்தியைக் குறிக்கும் :—

(i) " மன்றாடும் வாழ்வே மரகதஞ்சேர் மாணிக்கக் குன்றே "

(ii) ' பச்சைநிற மாய்ச்சிவந்த பாகங் கலந்துலகை
இச்சையுட னீன்றாளை யாங்காண்ப தென்னாளோ "

என்னுந் திருவாக்குகளும் இதனை வலியுறுத்தும் —

ஆதித்தியன் கதிர்களைத் தடுத்துத் திரும்பச்செய்து பார்க்கில் பல நிறங் கள் ஒன்றோடொன்று பொருந்தித் தோன்றா நிற்கும் — அவைகளில் முக்கி யமானவை ஐந்து. இவ்வைந்து நிறங்களுமே ஞானாதித்தியனாகிய சிவபிரான் கதிர்களாகிய பஞ்சசத்திகளின் நிறங்களென முன்னர் ஓதப்பெற்றிருக்கிறது. இந்நிறங்களில் பச்சை நிறமே விசேடித்ததாதலான் இந்திர தனுவை பச்சை வில் என்பது மென்க. வெய்யிலின் வெப்பம் பசுமையான மர நிழலை யடைந் தவர்களுக்குத் தணிவதுபோல், பிறவி வெப்பமானது சிவபிரான் அருணிழலை யடைந்தவர்களுக்கு நீங்கும்.—

" வெய்ய பிறவிவெயில் வெப்பமெலாம் விட்டகல
ஐய னடிநீழ லணையுநா ளென்னாளோ "

என்றார் பெரியோரும் —

" மாணிக்கத்துள்ளே மரகத ஜோதியாய் "

என்பதின் கருத்து :—

" உடையாளுன்ற னடுவிருக்கும் "

என்னுந் திருவாக்கி லமைந்துள்ளது —

கனகசபையின் கண் நடிக்கும் திரு நடனத்தை அன்போடு தெரிசித்த வர்கள் பெறும் பேற்றை யென்னென்று கூறுவேனென்று வியந்தோதி அப் பேற்றின் பெருமையை வரும் மந்திரத்திற் கூறுகின்றார்.—

20 " பெற்று ருலகிற் பிரியாப் பெருநெறி
பெற்று ருலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றாரம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்று ருலகுடன் பேசாப் பெருமையே."

( இ—ள். )— உலகில் பிரியா பெருநெறி — இவ்வுலகத்தில் தங்களை விட்டு நீங்காத ஞானநெறியையும் ; உலகில் பிறவா பெரும்பயன்—இவ்வுல கத்தில் இன்னும் பிறவாமையாகிய மேலான பயனையும் ; அ மன்றின் பிரி யா பெரும்பேறு — அந்த ஒப்பற்ற கனகசபையினின்றும் நீங்காத முத்திப் பேற்றையும் ; உலகு உடன் பேசா பெருமை — உலகத்தாரோடு பேசாத பெருமையுமாகிய இவைகளை ; பெற்றார் —( முதல்வனைக் கனகசபையின் கண் வழிபட்டவர்கள் ) பெற்றார்கள் என்பதாம்.

( பொழிப்பு. )— இவ்வுலகத்தில் தங்களைவிட்டு நீங்காத ஞான நெறி யையும், இவ்வுலகத்தில் இன்னும் பிறவாமையாகிய மேலான பயனையும் ஒப் பற்ற கனகசபையினின்றும் நீங்காத முத்திப் பேற்றையும், உலகத்தாரோடு பேசாத பெருமையுமாகிய இவைகளை முதல்வனைக் கனகசபையின்கண் வழி பட்டவர்கள் பெற்றார்கள் என்பதாம்.

" பெற்றேம் பிறவாமை பேசாமை யாயிருக்கக்
கற்றே மெனவுரைக்கக் காரியமென்—சற்றேனு
நீக்கற்ற வின்ப நிலைபொருந்தி யேசற்று
வாக்கற்றாற் பேசுமோ வாய்."

என்னுந் திருவாக்கினையும் கருதிக்கொள்க.—

பெருநெறியென்றது ஞானநெறியை. இதைவிட உலகத்தில் மேலான நெறியில்லை — " ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை " என்னுந் திரு வாக்காற் காண்க.

ஞானத்தினல் அஞ்ஞானம் கெடும் — அது கெட்டால் பிறவித் துன்பம் நீங்கும் — ஆதலின் ஞானத்தின் பின் பிறவாமையாகிய பயனையும் — பிறவாமை யெய்தினும் பேரின்பத்தை யனுபவிக்கச் சிவபிரான் திருவடியை விட்டு நீங்காத சாதனை புரிதல் வேண்டுமாதலின் பிறவாப் பெரும்பயனின் பின்மன்றிற்பிரியாப் பெரும்பேற்றையும், இவ்வாறு சிவபிரான் திருவடியை விட்டு நீங்காத உலகத்தைவிட்ட நிலையானது மௌன நிலையை விளக்கும்— ஆதலின் " மன்றிற் பிரியாப் பெரும் பேற்றின் பின் உலகுடன் பேசாப் பெருமையையும் வைத்து முறைப்படுத்தி யோதி யருளினர்.—

வாயாற் பேசுபவர்கள் நிட்டையிலே நிலையார் என்பதும், நிட்டாபரர் வாயாற் பேசார் என்பதும், இதை விளக்கவே மௌனகுருவானவர் கல்லால விருக்ஷத்தின் நீழலில் கைகாட்டிச் சமாதியிலிருந்தார் என்பதும்

" சொன்னவர்தாம் நிட்டை தொகுத்திரார் நிட்டையிலே
மன்னினவர் போதியார் மாமௌனன் — றன்னுள்
விருப்பாகக் கைகாட்டி மிக்கவட நீழ
லிருப்பா னிருவிகற்பத் தே. "

என்னுந் திருவாக்கால் விளங்கும்.—

பிறவாமைக்குக் காரணம் பேசாப் பெருமையே —

இதனை :—

" பெரும்பிறவி சாரா மற் கற்றேமே மோனக் கரு "

என்னுந் திருவாக்காற் காண்க.

" செயலற் றிருப்பார் செகத்தோடுஞ் சேரார் "

என்றதும் மேற்கூறிய கருத்துப் பற்றியே —

உலகியல் மாருதவர்களுடன் சேர்தலும் பேசுதலும் முதல்வன் பெருங் கருணையை மறக்கச் செய்யும்

வரும் மந்திரத்தில் இந்திரியங்களை விடயங்களிற் செல்லாமல் அடக்குவதாகிய பெருமையை யறிந்து அதன் பயனுகிய பிறவாமையை முதல்வன் அளிப்பதை விளக்குகிருர் —

21 " பெருமை சிறுமை யறிந்தெம் பிரான்போ
லருமை யெளிமை அறிந்தறி வாரா
ரொருமையு ளாமைபோ லுள்ளைந் தடக்கி
யிருமையுங் கேட்டிருந் தார்புரை யற்றே."

( இ—ள். )—எம்பிரான்போல்—எமது இறைவனைப்போல்; பெருமை — ( பஞ்சேந்திரியங்களை யடக்குதலாலு ளதாகும் ) பெருமையையும்; சிறுமை — அவைகளை யடக்காததால் உளதாகும் சிறுமையையும்; அறிந்து தெரிந்து; அருமை—( பெருமையின் பயனாகிய ) கிடைத்தற்கரிதாகிய பிறவாமையையும்; எளிமை —( சிறுமையின் பயனாகிய ) தாழ்வாகிய பிறப்பையும்; அறிந்தறிவாரார்—அறிந்து முறையே இவற்றை அப்பெருமை சிறுமைக்குப் பயனாய் வரும்படிக்கும் திருவுளங்கொள்பவர் யார் ஒருவருமில்லை; ( இவ்வுண்மையை யுணர்ந்த ஞானிகள் ) ஒருமையுள் — ஒரு பிறப்பின் கண்ணே; ஆமைபோல் —ஆமையைப் போல்; உள் ஐந்தடக்கி—(பிறவித் துன்பத்துக் கேதுவாய் வரும் விடயங்களிற் போக வொட்டாது ) ஐந்திந்திரியங்களை யும் உள்ளே அடக்கி; புரையற்று—குற்றம் நீங்கப்பெற்று; இருமையும் கேட்டிருந்தார் — பெருமை சிறுமையாகிய இரண்டின் தன்மையையும் ஆராய்ந்தறிந்து மௌனமாயிருந்தார் என்பதாம்.

( பொழிப்பு. )— பஞ்சேந்திரியங்களையும் அடக்குதலாலாகும் பெருமையையும், அவைகளை யடக்காதலாலாகும் சிறுமையையும் அறிந்து, அவைகளை யடக்குபவர்களுக்குக் கிடைத்தற்கரிதாகிய பிறவாமையையும், அடக்காதவர்களுக்கு தாழ்வாகிய பிறப்பையும் அளிக்கவல்லார் எமது இறைவனைப் போல் யார் உளர்? ஒருவருமில்லை; ( ஆதலின் இவ்வுண்மையை யுணர்ந்தவர்கள் ) துன்பத்துக்கேதுவாய் வரும் விடயங்களிற் போகவொட்டாது ஆமைபோல் ஐந்திந்திரியங்களையும் உள்ளே அடக்கி குற்றம் நீங்கப்பெற்று பெருமை சிறுமையாகிய இரண்டின் தன்மையையும் ஆராய்ந்தறிந்து நிட்டாபரராய் மௌனமாயிருந்தார்கள்.

இக்கருத்தை யொட்டியே எமது திருவள்ளுவ நாயனார் மனவாக்குக் காயங்களைத் தீயவழியிற் செல்லாமல் அடக்குவதாகிய அறம் தேவருலகத்திற் கொண்டுபோய் விடுமென்றும் அடங்காமையாகிய பாவம் நரகத்திற் செலுத்தி விடுமென்றும்; அடக்கமுடையவன் உயர்ச்சிமலையினும் மிகப் பெரிதென்றும்; ஒருவன் ஒரு பிறப்பின் கண்ணே ஆமையைப்போல் ஐந்தையும் அடக்க வல்லவனாகில் அவ்வல்லமை அவனுக்கு எழுபிறப்பின் கண்ணும் உறுதியுடைத்தென்றும் திருவாய் மலர்ந்தருளியது.—

(i) " அடக்க மமரரு ளுய்க்கும் அடங்காமை
யாரிரு ளுய்த்து விடும் "

(ii) " நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
மலையினு மாணப் பெரிது "

(iii) " ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
னெழுமையு மேமாப் புடைத்து "

என்பதாற் காண்க.

மேற்கூறிய கருத்து :—

" ஆமை வருமாட்கண் ணைந்தொடுக்கஞ் செய்தாற்போல்
ஊமை யுருக்கொண் டொடுங்குவது மெக்காலம் "

என்னுந் திருவாக்கினும் —

" செய்தற் கரிய செயல்பலவும் செய்துசிலர்
எய்தற் கரியதனை எய்தினர்—ஐயாநாம்
செய்யாமை செய்து செயலறுக்க லாயிருக்கச்
செய்யாமை செய்யாத வாறு " என்ற

திருக்களிற்றுப்படியார்த் திருப்பாட்டினும் அமைந்துள்ளது.—

வரும் மூன்று மந்திரங்களில் முத்தியிலச்கணம் உணர்த்தப் பெறுகிறது.

22 " புரையற்ற பாலினு ணெய்கலந் தாற்போல்
திரையற்ற சிந்தையு ளாரிய னென்செப்பும்
உரையற் றுணர்வோ ருடம்பிங் கொழிந்தாற்
கரையற்ற சோதி கலந்த சத்தாமே."

(இ—ள். )— புரை அற்ற பாலினுள் நெய் கலந்தாப்போல் — குற்ற மற்ற பாலில் நெய் கலந்தாற் போல்; திரை யற்ற சிந்தையுள் ஆரியன் என் செப்பும் — சலன மற்ற சிந்தையுள் அத்துவிதமாய் நிற்கும் சற்குருவானவர் சொல்வது யாதெனில்; உரை அற்று உணர்வோர் உடம்பு இங்கு ஒழிந்தால் — பேச்சற்று மௌன நிலையில் நிற்கும் தெளிவடைந்த உயிரானது வாழும் உடம்பானது நாசமானல்; கரை அற்ற சோதி கலந்த சத்து ஆமே—எல்லை யில்லாத அருட் சோதியில் கலந்த சத்து ஆகுமென்பதாம்.

(பொழிப்பு.)—குற்ற மற்ற பாலில் நெய் கலந்தாற்போல் சலனமற்ற சிந்தையுள் அத்துவிதமாய் நிற்கும் சற்குருவானவர் சொல்வது யாதெனில் பேச்சற்று மௌன நிலையில் நிற்கும் தெளிவடைந்த உயிரானது வாழுதற்கிடமாகிய உடம்பு நாசமானால் எல்லையில்லாத அருட்சோதியிற் கலந்த சத்தாகுமென்பதாம்.

இம்மந்திரத்தின் கருத்து ஞானிகள் இந்தச் சரீரத்தோடும் கூடி நின்றே சிவபிரான் திருவடியே பற்றுக்கோடாக மௌனமாயிருந்து இந்தச்சரீரம் நீங்கினால் பரமுத்தி யடைவார்கள் என்பதாம் —

இதனை : —

" கண் ணுதலதனி றைவதனிற் கலந்து
காயம் கழிந்தக்கால் எங்கும், கருதரன் போனிற்பர் "

என்னுந் திருவாக்காலும் காண்க

23 " சத்த முதலைந்துந் தன்வழித் தான்சாரிற்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரும்
அத்த மிதுகுறித் தாண்டுகொ ளப்பிலே "

(இ—ள்.)—சத்தம் முதல் ஐந்தும் தன் வழிதான் சாரில்—சத்தமாதி விடயங்கள் (ஆன்மாவை உபாதியாது) தங்கள் இனமாகிய அசத்தைச் சேர்ந்த வழி; சித்துக்கு சித்து அன்றி சேர்விடம் வேறு உண்டோ—உணர்த்தவுணரும் சித்தாகிய ஆன்மாவுக்கு உணர்த்தும் சித்தாகிய இறைவன் திருவடியை விட சேரும் இடம் வேறு உண்டோ (இல்லை) இதுபோல்; சுத்த வெளியில் சுடரில் சுடர் சேரும்— சிதாகாயத்தில் சுயம் சோதியாகிய திருவருளில் ஆன்மப்பிரகாசம் சேரும்; அத்தம் இது குறித்து ஆண்டுகொள் அப்பிலே — இவ்வுண்மையை கடல் நீரிற் கண்டு கொள்க.

(பொழிப்பு.)— சத்தமாதி விடயங்கள் (ஆன்மாவை உபாதியாது) தங்கள் இனமாகிய அசத்தைச் சேர்ந்தவழி உணர்த்தவுணரும் சித்தாகிய ஆன்மாவுக்கு உணர்த்தும் சித்தாகிய இறைவன் திருவடியைவிடச் சேரும்இடம் வேறு உண்டோ? இல்லை.—இதுபோல் சிதாகாயத்தில் சுயம் சோதியாகிய திருவருளில் ஆன்மப்பிரகாசம் சேரும் — இவ்வுண்மை கடல் நீரிற் கண்டு கொள்க.

படிகமானது எவ்வாறு தன்னையடுத்த பஞ்ச வன்னங்களின் இயல்பே தன் மாட்டுக் காட்டிநிற்குமோ அவ்வாறு பெத்த நிலையில் ஆன்மாவானவன் பஞ்சேந்திரியங்களின் வசப்பட்டு அவைகளினியல்பே தன்மாட்டு விளங்க நிற்பான் — திருவருளால் தத்துவசோதனை செய்து, ஞானத்தைத் தடைசெய்து நிற்கும் இந்திரியங்களின் வேறுவான் தன்னைக்கண்டால் ஆன்மாவுக்குச் சாதி முறைமையால் சேர்விடம் சிவபிரான் திருவடியே என்பதாம்.—

இக்கருத்து: —

(i) "மாயா சகமிலையேல் மற்றெனக்கோர் பற்றுமில்லை
நீயேநா னென்றுவந்து நிற்பேன் பராபரமே"

(ii) "தன்னை யறிந்தாற் றலைவன்மேற் பற்றலது
பின்னையொரு பற்றுமுண்டோ பேசாய் பராபரமே"

என்னுந் திருவாக்குகளில் அமைந்துள்ளது.—

கடல் நீரிற் கண்டுகொள் என ஓதிய விடயத்தை வருமந்திரத்தில் விளக்கிக்கூறுகின்றார்.

24 "அப்பினிற் கூர்மை யாதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த வவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோல்
செப்பினிற் சீவன் சிவத்து ளடங்குமே"

(இ—ள்.)—அப்பினில் கூர்மை—கடல் நீரில் நுட்பமாயுள்ள உவர்ப்பானது; ஆதித்தன் வெம்மையால்—சூரியனது வெப்பத்தால்; உப்பு என பேர் பெற்று—உப்பு என்னும் பெயரைப் பெற்று; உரு செய்த அ உரு—உருவத்தை யெய்திய அவ்வுப்பு; அப்பினில் கூடி அது ஒன்றாகும் ஆறு போல்—அது மீளத்தண்ணீரிற் சேர்ந்து அதனோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்றல் போல்; செப்பில் சீவன் சிவத்துள் அடங்கும்— சொல்லில் ஆன்மாவானவன் சிவபிரான் வியாபகத்துளடங்கி அத்துவிதமாய் நிற்பான் என்பதாம்.

(பொழிப்பு)—கடல் நீரில் நுட்பமாயுள்ள உவர்ப்பானது சூரியனது வெப்பத்தால் உப்பு என்னும் பெயரைப் பெற்று உருவத்தை யெய்தியதானது மீளத் தண்ணீரிற் சேர்ந்த வழி அதனோடு அத்துவிதமாய்க் கலந்து நிற்றல் போல் ஆன்மாவானவன் சிவபிரான் வியாபகத்துளடங்கி அத்துவிதமாய் நிற்பான்.

இக்கருத்தை யொட்டியே எமது பத்திரகிரியார் :—

" அப்பி லுறையுமுப்பு மரனடியிற் சேர்ந்தோரும்
செப்பி லொன்ருய்த் தோன்றுமெனச் செப்புவது மெக்காலம்"

எனவும்.

தாயுமானசுவாமிகள் :—

" அப்புமுப்பும் போன்ற வயிக்யபரா னந்தர்தமக்
கொப்புவமை சொல்லவும்வா யுண்டோ பராபரமே"

எனவுந் திருவாய்மலர்ந் தருளியது.

சிவத்துளடங்கிய ஆன்மாவின் நிலைக்களத்தை வரும் மந்திரத்தில் விளக்குகிருர் :—

25 " அடங்குபே ரண்டத் தணுவண்டஞ் சென்றங்
கிடங்கொண்ட தில்லை யிதுவன்றி வேறுண்டோ
கடந்தொறு நின்ற வுயிர்கரை காணிற்
றிடம்பட நின்ருன் றிருவடி தானே."

(இ—ள்.)—பேர் அண்டத்து அடங்கு அணு—பெரிய உலகில் நிறைந்துள்ள சட அணுக்கள் ; அண்டஞ் சென்று—ஆகாயத்திற் சென்று ; அங்கு இடம் கொண்டதில்லை — அங்கு வேறிடத்தைப்பற்றி நின்றதில்லை ; இது அன்றி வேறுண்டோ—இது அல்லாமல் வேறு உண்மையுளதோ ? —இல்லை. இதுபோல் ; கடந்தொறு நின்ற உயிர்—ஒவ்வொரு உடலின் கண்ணுமுள்ள ஆன்மாவும் ; கரை காணில் — முத்திக்கரை யெய்தின் ; திருவடி தான் திடம்பட நின்ருன் — சிவபிரான் திருவடியையே பற்றி உறுதியாய் நிற்கும் என்பதாம்

(பொழிப்பு. —பெரிய உலகில் நிறைந்துள்ள சட அணுக்கள் ஆகாயத்திற் சென்று அங்கு வேறிடத்தைப்பற்றி நின்றதில்லை இதுவல்லாமல் வேறு உண்மையுளதோ ?—இல்லை. இதுபோல் ஒவ்வொரு உடலின் கண்ணுமுள்ள ஆன்மாவும் முத்திக்கரை யெய்தின் சிவபிரான் திருவடியையே பற்றி உறுதியாய் நிற்கும்.

(வி—ரை. )—இவ்வுலகத்தின் கண் உள்ள அணுக்கூட்டங்கள் பூதாகாயத்துக்கப்பாற் போகுமாறில்லை. அதுபோல் ஆன்மாக்கள் தனுவாதிகளைப் பெறலும், வளர்தலும், தேகம் நாசமடைதலும், இளைப்பாறுதலும், அனுக்கிரகம் பெறலும் திருவருளிலேயே—வேறிடத்திலல்ல.

" அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்
டருளி லழிந்திளைப் பாறி மறைந்திட்
டருளான வானந்தத் தாரமு தூட்டி
அருளாலென் னந்தி யகம்புகுந் தானே "

என்னும் மந்திரத்தானும்,

' எட்டுத் திசையுமொன்ரு யின்பமாய் நின்றவுனை
விட்டுப் பிரியவிடம் வேரூ பராபரமே "

என்னும் தாயுமானுர் திருவாக்கானும் காண்க.

பெத்த நிலை முத்தி நிலை யிரண்டினும் திருவருளிலேயே இருப்பதானுல் ஆன்மாக்கள் தவங்களைப் புரிந்து முத்தியடைய முயலுவானேன் எனில் இவ்வுலகத்தில் படல விசேடத்தால் ஒளி மழுங்கிய கண்ணிடத்தும் அது நீங்கி ஒளி விளங்கிய கண்ணிடத்தும் வேற்றுமையின்றி ஆதித்தன் சமமாய் நின்ருலும், அவ்வாதித்தன் காட்சியில்லாத கண்ணுக்கு மாலையிருட்டாய்த் தோன்றுவனன்றி ஒளி விளங்கிய கண்ணுக்குத் தோன்றுமாறுபோல் விளங்கித்தோன்ருன். அதுபோல் முதல்வன் பெத்தர் மாட்டும் முத்தர் மாட்டும் அத்துவிதமாய் ஒப்ப நின்ருலும் முத்தருக்கு விளங்கித்தோன்றிச் சிவானந்தம் மேலிடச் செய்வதுபோல் பெத்தருக்கு விளங்கித்தோன்ருன் ஆதலின் என்க.

இதை :—

" அருட்கண் ணிலாதார்க் கரும்பொரு டோன்ரு
அருட்கண்ணி ஞேர்க்கெதிர் தோன்று மரனே
இருட்கண்ணி ஞேர்க்கிங் கிரவியுந் தோன்ருத்
தெருட்கண்ணி ஞேர்க்கெங்குஞ் சீரொளி யாமே.

என்னும் மந்திரத்தினும் விளக்கியுள்ளார்.—

முத்திக்கரை யெய்திய ஆன்மாக்கள் திருவடியைப்பற்றி நிற்பதன்றி வேறிடத்தைப்பற்றி நிற்பதில்லை யென்னும் உண்மையை வரும் மந்திரத்தினும் வற்புறுத்துகிருர்.

2ட " திருவடி யேசிவ மாவது தேரிற்
றிருவடி யேசிவ லோகஞ் சிந்திக்கிற்
றிருவடி யேசெல் கதியது செப்பிற்
றிருவடி யேதஞ்ச முட்டெளி வார்க்கே "

(இ—ள்.)—தேரில்—(நூல்களை) ஆராய்ந்தறியில்; சிவமாவது—சிவத்தன்மை யெய்துதல் என்பதும்; சிந்திக்கில்—(நூல்களை ஆராய்ந்தறிந்த விடயத்தைச்) சிந்தித்துப் பார்க்கில்; சிவலோகம்—சிவலோகம் என்பதும்;

சொல்லில்—(சிந்தித்துப்பார்த்த விடயத்தைச்) சொல்லில்; செல்கதி—(ஆன்மாக்கள்) முடிவிற் சென்றடையும் குறிக்கோளாவதும்; தஞ்சம்—புகலிடமாவதும்; உள்தெளிவார்க்கு — (பதி பசு பாசங்களின் இயல்பை) உள்ளவாறுணர்ந்தவர்களுக்கு; திருவடியே—சிவபிரான் திருவடியே அதுவன்றி வேறல்ல என்பதாம்; ஏ - பிரிநிலைப்பொருளது.

(பொழிப்பு.)—நூல்களை யாராய்ந்தறியில் சிவத்தன்மை யெய்துதல் என்பதும், ஆராய்ந்தறிந்த விடயத்தை சிந்தித்துப் பார்க்கில் சிவலோகம் என்பதும், சிந்தித்துணர்ந்ததைச் சொல்லில் ஆன்மாக்கள் முடிவிற்சென்றடையும் குறிக்கோளாவதும், புகலிடமாவதும். முப்பொருள்களின் இயல்பை உள்ளவாறுணர்ந்தவர்களுக்குச் சிவபிரான் திருவடியே என்பதாம் இம்மந்திரத்தின் கருத்தும்.

" சத்தமுத லைந்துந் தன்வழித் தான்சாரில் "

எனவரும் மந்திரத்தின் கருத்தும்,

கீழ்வரும் தாயுமானர் திருவாக்கி லமைந்துள்ளன: -

" எங்கு மென்னை யிகலுற வாட்டியே
பங்கஞ் செய்த பழவினை பற்றற்றால்
அங்க ணவன் னடியிணை யன்றியே
தங்க வேறிட முண்டோ சகத்திலே "

வரும் மந்திரத்தில் ஓரோர் சமயம் சமாதி சலனம் வந்தகாலத்தில் மீளச் சமாதி நிலை யெய்தல் குருவாயெழுந்தருளிவரும் அருளாலின்றி அமையாதென்பதை விளக்குகிறார்:—

27 " தெளிவு குருவின் றிருமேனி காண்டல்
தெளிவு குருவின் றிருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் றிருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுரு சிந்தித்த றானே "

(இ—ள்.)—குருவின் திருமேனி காண்டல்— குருவின் திருமேனியைத் தரிசித்தலும்; குருவின் திருநாமஞ் செப்பல் — அவர் திருநாமத்தை விதிப்படி உச்சரித்தலும்; குருவின் திருவார்த்தை கேட்டல் — அவர் அருளும் உபதேச மொழியைக் கேட்டலும்; குருவுரு சிந்தித்தல்—அவர் உருவமாகிய மந்திரத்தை விதிப்படி சிந்தித்தலுமே; தெளிவு — கலங்கிய சமாதி நிலையைத் தெளியச் செய்வனவாம்.—உம்மைகள் தொக்கன.

(பொழிப்பு.)—குருவின் திருமேனியைத் தெரிசித்தலும், அவர் திருநாமத்தை விதிப்படி உச்சரித்தலும், அவர் அருளும் உபதேசமொழியைக் கேட்டலும், அவர் உருவமாகிய மந்திரத்தைச் சிந்தித்தலுமே, கலங்கிய சமாதி நிலையைத் தெளியச் செய்வனவாம்.

இவ்வாறு குருவின் திருவருளைப் பெறின் அடையும் பயனை வரும் மந்திரத்திற் கூறுகிறார்.

28 " தானேபுல னைந்தும் தன்வச மாயிடும்
தானேபுல னைந்தும் தன்வசம் போயிடும்
தானேபுல னைந்தும் தன்னில் மடைமாறும்
தானேதனித் தெம்பிரான் றன்னைச் சந்தித்தே."

(இ—ள்.)—தனித்து—ஐம்புலன்களின் வேறுவான் தன்னைக்கண்டு; (ஆன்மாவானவன்) எம்பிரான் தன்னை சந்தித்து — எமது இறைவனாகிய சிவபிரானை தெரிசித்தால்; புலனைந்தும் தானே தன்வசமாயிடும், தன்வசம் போயிடும், தன்னில் மடைமாறும் — ஐம்புலன்களும் வேறு காரணம் வேண்டாது ஆன்மாவின் வசமாகி ஆன்மா செலுத்தும் வழியிற் புகுந்து, அவன் திருப்பும் வழிகளிலேயே திரும்பும் என்பதாம்.

(பொழிப்பு.)—ஆன்மாவானவன் ஐம்புலன்களின் வேறுவான் தன்னைக்கண்டு எமது இறைவனாகிய சிவபிரானை தெரிசித்தால் ஐம்புலன்களும் அவன் வசமாகி அவன் செலுத்தும் வழியிற் புக்கு அவன் திருப்பும் வழிகளிலே திரும்பும் — அவனை மீறி ஒரு சிறிதும் சேட்டியா என்பதாம்.

ஐந்து குதிரை பூட்டிய தேரிற் செல்வோன் அக்குதிரைகளீர்க்கும் வழியெல்லாம் தானோடி உழன்று, பின்னர் அவற்றைத் தன் வயப்படுத்தினால் தான் விரும்புமிடத்திற்கு அவற்றைச் செலுத்தி நலமுறல் போல் ஐம்புலன்களும் திருவருளால் தன் வசமாயின் ஆன்மா திருவடியை அடைதல் திண்ணம்.—இக்கருத்து :—

' இந்திரிய மெனைப்பற்றி நின்றேஎன் வசத்தி
னிசையாதே தன்வசத்தே யெனையீர்ப்ப திவற்றைத்
தந்தவன்ற னாணைவழி நின்றிடலா லென்றுந்
தானறிந்திட் டவற்றினொடுந் தனையுடையான் றாள்கள்
வந்தனைசெய் திவற்றின்வலி யருளினால் வாட்டி
வாட்டமின்றி யிருந்திடவும் வருஞ்செயல்க ளுண்டேன்
முந்தனுடைச் செயலென்று முடிந்தெழுக வினைகள்
மூளாவங் காளாகி மீளா னன்றே."

என்னுஞ் சிவஞான சித்தியார்ச் செய்யுளினு மமைந்துள்ளது.—

இவ்வாறு ஐம்புலன்களும் தன்வசமாய் நிற்கும் சிவஞானியின் ஜீவன் முத்த நிலையை வரும் மந்திரத்திற் கூறுகிறார்.

29 " சந்திப்பது நந்தி தன்திருத் தாளிணை
சிந்திப்பது நந்தி செய்ய திருமேனி
வந்திப்பது நந்தி நாமமென் வாய்மையாற்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே."

( இ—ள் )— ( ஐம்புலன்களும் என் வசப்படின் ) சந்திப்பது நந்தி தன் திருத்தாளிணை—நான் தெரிசிப்பது சிவபிரான் சீபாதமாகிய திருவருளை யே ; சிந்திப்பது நந்தி செய்ய திருமேனி — சிந்தனை செய்வது அவர் செவ்விய திருமேனியாகிய பஞ்சாக்கரத்தையே ; என்வாய்மையால் வந்திப்பது நந்தி நாமம் என் வாக்கால் புகழ்வது அவர் திருநாமத்தையே ; நந்தி பொற் போதமே புந்திக்குள் நிற்பது—அவர் சிவஞான உபதேசமே எனது புத்தியில் நிலைத்து நிற்பது என்பதாம்.

( பொழிப்பு. )—ஐம்புலன்களும் என் வசப்படின் நான் தெரிசிப்பது சிவபிரான் திருவடியாகிய திருவருளையே, சிந்தனை செய்வது அவர் செவ்விய திரு மேனியாகிய பஞ்சாக்கரத்தையே, என் வாக்காற் புகழ்வது அவர் திரு நாமத்தையே. என் புத்தியை விட்டு நீங்காமல் நிற்பது அவர் அருளிய சிவ ஞான உபதேசமே.—இவையின்றி வேறொன்றினையும் காண்பதில்லை யென்பதாம்.

சிவஞான சித்தியாரில் :—

" பரஞானத்தாற் பரத்தைத் தரிசித்தார் பரமே
பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்."

எனவோதியதும் இம்மந்திரத்தின் கருத்தை விளக்கும்.

இந்நிலையை யெய்திய சீவன் முத்தர் அடையும் சாயுச்சிய நிலையை வரும் மந்திரத்திலுணர்த்துகிறார் —

30 " போதந் தருமெங்கள் புண்ணிய நந்தியை
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினோர்
நாத னடத்தா னயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந்தார் விண்ணே."

( இ—ள். )—போதந்தரும் எங்கள் புண்ணிய நந்தியை— சிவ ஞானத்தை யருளும் எமது இறைவனாகிய நின்மல சிவபிரானை ; போதந்தனில்

வைத்து புண்ணியராயினோர் — அருளே கண்ணாகத் தம் போதத்திற் பொருந்தப்பெற்ற புண்ணியர்; நாதன் நடத்தால்—நாதன் திருநடனத்தால்; நயனம் களிகூர—கண்கள் இன்பமெய்தவும்; வேதம் துதித்திட—வேதம் துதிக்கவும்; விண்போய் அடைந்தார்—மேலான சிதாகாயத்தை அடைந்தார்கள் என்பதாம்.

(பொழிப்பு.) - சிவ ஞானத்தை யருளும் எமது இறைவனாகிய நின்மல சிவபிரானை ஞானிகள் தங்கள் அறிவின் கண்ணே வைத்து அவன் திருநடனத்தால் கண்கள் இன்பமெய்தவும் வேதம் துதிக்கவும் மேலான சிதாகாயத்தை அடைந்தார்கள் என்பதாம்.

ஈண்டும் "போதந்தனில் வைத்துப் புண்ணியராயினோர் போயடைந்தார் விண்ணே" என்றதும்,

சுந்தரமூர்த்தி நாயனார் சரித்திரத்தில் :—

ஏற்ற தொண்டரை யண்டர்வெள் ளானையி னெதிர்வலங் கொண்டேற்ற
நாற்ற டங்கடன் முழக்கென வைவகை நாதமீ தெழுந்தார்ப்பப்
போற்றி வானவர் பூமழை பொழிந்திடப் போதுவா ருயிரெல்லாஞ்
சாற்று மாற்றங்க ளுணர்பெருந் துணைவரை மனத்தினிற் கொடுசார்ந்தார்.

என்னும் பெரிய புராணச் செய்யுள் கூறியதும் ஒரே சித்தாந்தக் கருத்தை விளக்கும்.

புண்ணிய நந்தியைப் போதந்தனில் வைத்துப் புண்ணியராயினோர் என்றதால் ஞானிகள் முடிவில் அவனேயாகின்ற சாயுச்சிய நிலையையும், அழியாத விண்ணைப்போய் மீளாதவண்ணம் அடைந்தார் எனவே சத்தாகியும் (உண்மை), போதந்தனில் வைத்து என்றதால் சித்தாகியும் (அறிவு), நயனங் களிகூர என்றதால் ஆனந்தமாகியும் ஆக இறைவனது தன்மையாகிய சச்சிதானந்த சொரூபத்தை யடைகிறார்கள் என்பது குறிக்கப்பெற்றது.

ஆசிரியர், முதலிரண்டு மந்திரங்களில் :—

(i) குருவாயெழுந்தருளி வந்து உபதேசம் அருளுவது சிவபிரானே யென்பதையும்;

(ii) (மல மறைப்பான் மூடப்பெற்றிருந்த அருட்கண்ணைத் திறக்கச் செய்தாலன்றி முதல்வன் உயிர்க்குயிராய் நின்றுபகரிப்பதும் அத்துவித நிலையும், பதி பசு பாசங்களினியல்பும் விளங்காதாதலான்) அருட்கண்ணைத் திறக்கச் செய்து உபதேச மொழிகளை யருளி முத்தி பயப்பிப்பதையும் தொகுத்துக் கூறி,

( iii ) மூன்றாவது மந்திரத்தில் முப்பொருள்களினியல்பையும்,

( iv ) 4 - முதல் 8 - வரையுள்ள மந்திரங்களில் மல நீக்கம் செய்யு மாற்றையும்,

( v ) 9-வது மந்திரத்தில் மலம் நீங்கப்பெற்றவர்களின் நிலையையும்.

( vi ) 10-வது மந்திரத்தில் அவர்கள் அனுட்டிக்கும் சாதனைகளி னியல்பையும்,

( vii ) 11-வது மந்திரத்தில் அச்சாதனைகளாற் பெறும் பயனையும்,

( viii ) 12 - முதல் 17 - வரையுள்ள மந்திரங்களில் அச்சாதனையிற் சித்தி பெற்றவர்களி னியல்பையும்,

( ix ) 13,—19 - வது மந்திரங்களில், வேறு தேவர்களை வழிபட்டு முத்தியடைதல் கூடாதோவென்னும் ஆசங்கையை நீக்க அத்தேவர்களெல் லாம் சிவபிரான் ஏவல் வழி நிற்பவர்களாதலான் அவ்வழிபாட்டுக்குத் தக்க பயனை யளிப்பது சிவபிரானும் அவனை விட்டு நீங்காத அருட் சத்தியுமே யென்பதையும்,

( x ) 20 - முதல் 26 - வரையுள்ள மந்திரங்களில், வேறு தேவர் களை வழிபடுபவர்கட்கு அவ்வழிபாட்டுக்குத் தக்க பயனை யளிப்பவர் சிவபி ரானே யாதலான் அவனை நேரில் வழிபடுபவர்கள் பெறும் பேற்றின் விசே டத்தையும், இயல்பையும்,

( xi ) 27 - வது மந்திரத்தில் ஓரோர் சமயம் சமாதி சலனம் வந்த காலத்தில் மீளச் சமாதி நிலை யெய்தல் குருவாயெழுந்தருளி வரும் அருளை மனவாக்குக் காயங்களால் வழிபட்டா லன்றி அமையாதென்பதையும்,

( xii ) 28-வது மந்திரத்தில் அருளை வழிபடுபவதாலலாம் பயனை யும்,

( xiii ) 29 - வது மந்திரத்தில் அருளை வழிபட்டு ஐம்புலன்களும் தங்கள் வசமாயின் சிவபிரானையன்றி வேறொரு விடயங்களிலும் மனஞ் செல்லாதென்பதையும்,

( xiv ) 30 - வது மந்திரத்தில் இவ்வாறு அறிவின் கண்ணே சிவ பிரானை வைத்திருக்கும் ஜீவன் முத்தர்கள் எமது சுந்தரமூர்த்தி சுவாமிகளைப் போல் சாயுச்சிய பதவி யடைவார்க ளென்பதையும் விளக்குகிறார்.

---

உபதேசவுரை முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

திருமூல நாயனார் திருவடி வாழ்க.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 6 | போகங்களையளித்தருளு கின்றனர் | போகங்களை யளித்தருளு கின்றனன் |
| ,, | 15 | தமது | தனது |
| ,, | 27 | நூற்களின் | நூல்களின் |
| ,, | 28 | தமிழராகலின் | தமிழாகலின் |
| ,, | 29 | நேர்மையை | நேர்மையைச் |
| 4 | 4 | மொழிபெயர்த்த | அருளிச்செய்த |
| ,, | 9 | பெருமானுக்கு | பெருமானுக்குச் |
| ,, | 18 | தூற்ற | துற்ற |
| 5 | இறுதி | அத்தியாயங்களிலும், | அத்தியாயங்களினும், |
| 6 | 1 | கழப்பனைக் | குழப்பனைக் |
| ,, | 8 | இவைகளிலும் | இவைகளினும் |
| 7 | 13 | யொன்றி | ஞென்றி |
| 11 | 14 | திருவாதவூரார் | திருவாதவூரர் |
| ,, | 19 | சொல்லும் | செல்லும் |
| 12 | இறுதி | இந்நூலுக்கு | இந்நூலுக்குச் |
| 13 | 5 | மந்திரங்களும் | மந்திரங்களுக்கும் |
| ,, | 13 | இருக்கக் | இருக்குங் |
| 15 | 29 | நடப்பித்தற்கு | நடப்பித்தற்குத் |
| 16 | 29 | கேட்டு | கேட்டுத் |
| 17 | 12 | செங்கோற் | செங்கோல் |
| 19 | 15 | இறைவன் | இறைவர் |
| ,, | 30 | செய்வார் | செய்வான் |
| 21 | 8 | கனமெனின் | ஙனமெனின் |
| 22 | 24 | மநங் | மனங் |
| ,, | 27 | விரித்து | விரிந்து |
| ,, | இறுதி | சிவபபேறு | சிவப்பேறு |
| 23 | 8 | மூன்றிற் | மூன்றில் |
| ,, | ,, | பாசத | பாசத் |
| 23 | 13 | நில்லாவே | நில்லா |
| 24 | 25 | ஒருமருமில்லை | ஒருவருமில்லை |
| 25 | 20 | யென்றருவுருவ | யொன்றருவுருவ |
| 26 | 30 | தடுத்து | தடுத்துப் |
| 27 | 26 | மூவகையாவர் | மூவகையராவர் |
| 28 | 22 | விளங்கும | விளங்கும் |
| 30 | 7 | சாயூச்சிய | சாயுச்சிய |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 31 | 15 | மதுபுரிந்தான் | மது புரிந்தாளே |
| ,, | 21 | ஆன்மாக்களுக்கு | ஆன்மாக்களுக்குப் |
| 32 | 19 | தீவிரத்தினியல்பை | தீவிரத்தினியல்பைக் |
| 34 | 25 | மாற்றி | மாற்ற |
| 35 | 20 | மலபாகமுடையவர்களுக்கு | மலபாகமுடையவர்களுக்குச் |
| ,, | 22 | வண்ணமாக்கி | வண்ணமாக்கிப் |
| ,, | 24 | குருவாயெழுந்தருள் | குருவாயெழுந்தருளி |
| 36 | 7 | யனுட்டித்து | யனுட்டிக்கத் |
| ,, | 10 | உயிர்களுக்குப் | உயிர்களும் |
| ,, | ,, | பிறப்பிறப்பற்று | பிறப்பிறப்பற்றுச் |
| ,, | 11 | பற்றில்லை | பற்றிலவாம். |
| ,, | 27 | தணடா | தண்டா |
| ,, | 30 | மக்திரத்தால் | மந்திரத்தால் |
| 37 | 20 | இதுகறுங் | இதுகாறுங் |
| ,, | 23 | கூறுவதென்பது | கூறுவதென்பதும் |
| 38 | 3 | கண்கூடாய் | கண்கூடாய்க் |
| ,, | 19 | இவ்வைமவங்களும் | இவ்வைம்மலங்களும் |
| 39 | 1 | யென்பது | யென்றது. |
| ,, | 2 | ஷை | ஷை |
| 40 | 5 | மறை | மறைய |
| ,, | 13 | விளங்குவார் | விளங்குவான் |
| ,, | 14 | முள்ளம் | முன்னம் |
| ,, | 16 | டானென் | டானென்று |
| ,, | இறுதி | திருவாக்கும் நன்கு | திருவாக்கும் இதை நன்கு |
| 43 | 26 | யதிட்டத்த | யதிட்டித்த |
| 44 | 12 | மயக்கமெய்தியிருக்கும் | மயக்கமெய்தி (இருக்கும்) |
| ,, | 24 | பேருள்ளதை | பேருண்மை |
| 45 | 17 | அமைந்துள்ளது | காணப்படும் |
| ,, | 20 | பெற்று | பெற்றுப் |
| 46 | 8 | அகுளப் பெற்ற | அருளப்பெற்ற |
| 48 | 3 | யெய்தி.........மற்று | யெய்திச் சகல பற்றுகளு மற்றுப் |
| ,, | 9 | கெண்டாற் போல் | கொண்டாற் போல் |
| ,, | 21 | ணமூர்த்தோ | ணமூர்த்த |
| ,, | 27 | போக்கியத் | போக்கியந் |
| 50 | 14 | மாக்கி ...... சித்திப்பதாம் | மாக்கச்சித்திக்கும் ஆன்மப் பிரகாசமாம் |
| ,, | 15 | சம்மந்தப்படாத | சம்பந்தப்படாத |
| ,, | 24 | தோள்றி | தோன்றி. |

| பக்கம். | வரி, | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 51 | 5 | மீதான | மீதானத் |
| ,, | 14 | பெற்றுளள | பெற்றுள்ள |
| 52 | 12 | மந்திரத்தானும் | மந்திரத்தினும் |
| ,, | 17 | நிலம்.....ஞமே" | நிலம்...ஞமே' என்னும் மந்திரத்தினும், |
| 54 | 2 | குறிலுமுளது | குறிலுமுள |
| 56 | 25 | பழை | பழ |
| 58 | 1 | சேட்டிக்கமாட்டா ; ஆகவே | சேட்டிக்கமாட்டாவாதலின் |
| ,, | 2 | கெடச்செப்பில் | கெடச்செய்யக் |
| ,, | ,, | காண்பதுமில்லை......மில்லை | கண்காண்பதும் காது கேட்பதுமின்றி நிற்றல். |
| ,, | 17 | செய்வதாம். | செய்வதாம். இதை, |
| 59 | 22 | எழுந்தருளியிருப்பது | எழுந்தருளியிருப்பர் |
| 60 | 14 | என்னும் | என்று |
| 61 | 26 | பண்ணுதல் | பண்ணுதலையே. |
| 62 | 7 | செய்தலாம் | செய்தலையே. |
| 63 | 17 | அழிவெய்துவனவாகிலும், | அழிவெய்துதலானும், |
| ,, | 18 | அதனை | இதனை |
| 64 | 9 | விதத்தையும் | விதத்தை |
| ,, | 23 | யடங்ய | யடங்கிய |
| 66 | 11 | சிவதத்துவம், | சிவதத்துவ |
| 67 | 2 | பயப்பிக்கக்கருவியாகவே | பயக்கக் கருவியாதற்கே |
| 68 | 1 | முப்பது | முப்பதும் |
| ,, | 7 | சிவமேயாய் | சிவமேயாய்ச் |
| ,, | 9 | தத்துவங்களையும்......ஏற | தத்துவங்களையும் முத்திக்கு ஏற, |
| ,, | 12 | அடங்கி | அடங்கிச் |
| ,, | 13 | செயவற்றிருந்தார்கள் | செயலற்றிருப்பார்கள் |
| ,, | 15 | கனகசபையை— | கனகசபையை இதை, |
| 69 | 2 | செயலற்று | செயலற்றுச் |
| ,, | 6 | சருத்து | கருத்து |
| ,, | 7 | யாம்படி | எனும்படி |
| ,, | 10 | கண்ணைபபோல | கண்ணைப் போலச் |
| ,, | 18 | சோமபலை | சோம்பலை |
| 70 | 8 | பயப்பிக்கும் — | பயப்பிக்கும். இதனை, |
| 71 | 20 | உலோபகாரமாக | உலோகோபகாரமாக |
| 72 | 24 | தேவிகாண | தேவிகாணத் |
| 73 | 14 | பொருளை | பொருள் |
| ,, | 17 | தாகவும் | தெனவும் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 73 | 18 | கொடுப்ப | கொடுப்பர் |
| ,, | 19 | தாகவும் கூறுவது | எனவும் கூறுப. |
| 74 | 18 | திருக்கூத்தை | திருக்கூத்தைப் |
| 78 | 19 | யடக்காதலாலாகும் | யடக்காததாலாகும் |
| ,, | 21 | வர்களுக்கு | வர்களுக்குத் |
| ,, | 24 | அடக்கி | அடக்கிக் |
| 79 | 7 | என்பதாற் | என்பவற்றாற் |
| 80 | 24 | இவ்வுண்மையை | இவ்வுண்மையைக் |
| 82 | 8 | தருளியது | தருளினர் |
| 84 | 20 | அருளாலின்றி | அருளா னன்றி |
| 85 | 18 | சிவபிரானை | சிவபிரானைத் |
| 86 | 20 | சித்தியாரில் | சித்தியார் |
| 87 | 9 | ஈண்டும் | ஈண்டு, |
| ,, | 29 | விளங்காதாதலான் | விளங்காவாதலான் |
| 88 | 22 | வழிபடுவதாலாலாம் | வழிபடுவதாலாம் |

இந்நூலில் அச்சுப்பிழைகள் அதிகமாயிருத்தலைப்பற்றி மெத்த விசனப்படுகிறேன். இதை அதிக விரைவில் அச்சிடவேண்டி நேரிட்டதாலும், நெடுநாள் என்தேகசவுக்கியம் குன்றியிருந்ததாலும், சரியாய்ப் பிழைகளைத்திருத்தமுடியவில்லை. சிறப்புப்பாயிர உரை வெளி வரும் போது அத்துடன் இவ்வுபதேசப்பகுதியையும் சேர்த்துப் பிழையில்லாது அச்சிட முயலுகிறேன்.

இங்ஙனம்,

**C. S. Sundaram.**